# அருளோசை

திருவள்ளுவர்
ஆண்டு 2004
ஆவணி
1973 சூன்


மாணிக்கவாசகர்

கணேசன்

## தமிழ்நாடு தெய்விகப் பேரவை
சென்னை-18

திருச்சிற்றம்பலம்

# திருவாசகம்

—:o:—

முத்தனே! முதல்வா! முக்கணா! முனிவா!
மொட்டறு மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யும்
சித்தனே! செல்வத் திருப்பெருந்துறையில்
செழுமலர்க் குருந்தமேவியசீர்
அத்தனே! அடியேன் ஆதரித்தழைத்தால்
அதெந்துவே? என்றருளாயே!

பொழிப்புரை :

இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய முத்தனே! எல்லாம் வல்ல முழுமுதல்வனே! அன்பு, அறிவு, ஆற்றல் எனும் மூன்று திருக்கண்களையுடையவனே! மொட்டு விரியாத நறுமலர் கொய்து நின் திருவடிக்கண் செந்தமிழ்ப் போற்றித் தொடர் புகன்று, தொழுது, வணங்கப் பெருங்காதலாகிய மேல் நிலையைக் கொடுத்து, அருள் செய்கின்ற மெய்யுணர்வு வடிவினனே! வளமிக்க திருப்பெருந்துறைக்கண், அழகிய நறுமலர் நிறைந்த திருக்குருந்த மர நீழலில் பொருந்திய சிறப்பு மிக்க அத்தனே! அடியேன் பேரன்புடன் அழைத்தால் "அஃதென்ன ?" என்று அருள்புரிவாயாக.

---

4-7-73 அன்று மாணிக்கவாசகர் திருநட்சத்திரம் (ஆனி மகம்) வருவதையொட்டி வெளியிடப்பெறுகிறது.






திங்களிதழ்

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.



| | | |
|---|---|---|
| மணி 1 | பிரமாதீச ஆனி<br>1973 ஜூன் | ஓசை 12 |



அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்!

கடந்த ஓராண்டுக் காலத்தில் எங்களை உற்சாகப்படுத்தி ஊக்க மளித்த அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கட்டுரைகள் தந்து உதவிய கட்டுரையாளர்கள் அனைவருக்கும், விளம்பரம் தந்து துணைபுரிந்தவர்களுக்கும் இதயங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்வதுடன், அதேபோல் இவ்வாண்டும் "அருளோசை" சிறப்பாகத் தொண்டாற்ற ஒத்துழைப்புத் தரும்படி கோட்டுக் கொள்கிறேன்.

இன்னும் பல அன்பர்கள் "அருளோசை" மணி-1, ஓசை-1லிருந்து வேண்டும் எனக்கோரி விண்ணப்பிக்கின்றனர். ஒரு சில படிகளே இருப்பதால், அவர்கள் ஆவலை நிறைவு செய்ய இயலாமைக்குப் பொறுத் தாற்றிக் கொள்ளவேண்டுகிறேன்.

"அருளோசை" அடுத்த இதழிலிருந்து தொடர்ச்சியான பக்க எண்களுடன் வெளிவரும். இது ஓராண்டு இதழ்களைச் சேர்த்து "பைண்டிங்" செய்து கொள்ள விரும்பும் அன்பர்களுக்கு வசதியாக இருக்கும் என நம்புகிறேன்.

அடுத்த இதழ் புதுமைப் பொலிவுடன் உங்கள் கரங்களை அலங்கரிக் கும் என்பதை மகிழ்வுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

தவத்திரு அடிகளார் அவர்களின் கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிடும்படி பல அன்பர்கள் கடிதம் எழுதியிருக்கிறார்கள். தவத்திரு அடிகளார் அவர்களின் இடையருத பொதுப்பணி காரணமாக அவர்கள் சிந்தித்து—எழுதுவதற்கு ஒரு சில மணித்துளிகள் கிடைப்பதே அரிதாக இருக்கிறது. எனவே பொறுத்தாற்றிக் கொள்ள வேண்டுகிறேன்.

பல சந்தாதாரர்களுக்கு இந்த இதழுடன் சந்தா முடிவடைகிறது. அவர்கள் தங்கள் சந்தாவை உடனடியாகப் புதுப்பித்துக் கொள்ள வேண்டுகிறேன்.

அ. நாராயணசுவாமி, பி.ஏ.,
பதிப்பாசிரியர்.

"அருளோசை" முதலிதழி லிருந்து பெற்றுக் கொண்டவர்கள் தயவுசெய்து தங்கள் சந்தாவை உடனடியாகப் புதுப்பித்துக் கொள்ள வேண்டுகிறோம்.

## இந்த இதழில்



---

## "அருளோசை"

### வினு விடைப் பகுதி—மே-73

### பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு : திரு. எம். சீனிவாசன், திருவாடானை, இராமநாதபுரம் மாவட்டம், சந்தா எண் 1837.

இரண்டாம் பரிசு : திரு. ந. கருப்பையா, அரண்மனைக் குறிச்சி, திருச்சி மாவட்டம், சந்தா எண் 243.

,, செல்வி. சொ. காந்தியம்மாள், பாளையாங்கோட்டை, நெல்லை மாவட்டம், சந்தா எண் 791.

மூன்றும் பரிசு : திரு. ப. சுப்பிரமணியம், தூத்துக்குடி, நெல்லை மாவட்டம் சந்தா எண் 465.

நான்காம் பரிசு : செல்வி. வ. காளியம்மாள், கம்பம், மதுரை மாவட்டம், சந்தா எண் 255.

---

# வள்ளுவம் ஏன் பிறந்தது?

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

தமிழினம் நிலவுலகத்தை மூடியிருந்த நீர்ப்பரப்பு மறைந்து, கல் தோன்றி மண்தோன்ருக் காலத்தே வாளொடு முன்தோன்றிய மூத்த இனம். வீரத்தில் மட்டுமல்ல; சிந்தனைத் திறத்திலும், சிந்தனையைச் செப்பும் மொழித் திறத்திலும், இலக்கியப் படைப்பாற்றலிலும், இலக்கியத்தின் பயனுகிய நனிநகாரிகத்திலும், இலக்கியத்தின் பயனுகிய நனிநாகரிகத்திலும் சிறந்து விளங்கிய இனம் 'தமிழினம். இதற்குச் செல்வச் செழிப்பும் இருந்தது. அதனுல், காலப்போக்கில் மதோன் மத்தமான வாழ்க்கையை நடத்தத் தொடங்கிவிட்டது. அதனுல் தமிழினத்தில் கள்ளும் காமமும் இடம் பெற்றன! ஐந்திணை ஒழுக்கத்திற்கு மாருகப் பரத்தையர் ஒழுக்கம் கால்கொண்டது. ஓரினத்திற்குள் உயர்வு தாழ்வு மனப்பான்மைகள் தலைகாட்டத் தொடங்கின; அவ்வழி பல்குழுத் தோற்றமும், பாழ்செய்யும் உட்பகையும், வேந்தலைக்கும் கொல் குறும்பும் வளரத் தொடங்கின. பொழுது விடிந்து பொழுது போனுற் போலப் பண்பாட்டை வளர்க்கும் சமயநெறிகளும் பலவாயினமையின் காரணமாக சமயநெறியாளர்க்கு மாருகச் சமயக் கணக்கர்கள் தமிழ்ச் சமுதாயத்தில் தோன்றினர். அவர்களும் சமுதாயத்தைப் பண்பியல் வழியில்—அமைதி நெறியில் "இவர் தேவர்" "அவர் தேவர்" என்று இரண்டாட்டுகின்ற புன்நெறியை வளர்த்தனர். இங்ஙனம், புகழ் பூத்து வாழ்ந்த தமிழினத்தின் வீழ்ச்சி தலைகாட்டியபொழுது திருவள்ளுவர் பிறந்தார்.

இருள் கடிந்தெழுகின்ற ஞாயிறெனத் தோன்றினுர் திருவள்ளுவர். திருவள்ளுவர் என்ற ஞாயிறு கனன்ற கதிரொளியே திருக்குறள். ஓரினத்தை அழிவு வராமல் பகைப்புலத்தில் காக்கும் போர் வீரனை விட வாழ்வியல்நெறியில் நயத்தக்க நாகரிகத்தினைக் கட்டிக் காப்பாற்றிய வள்ளுவர் போற்றுதற்குரியர்! ஏழேழ் பிறப்பும் போற்றுதற்குரியவர். வடபுலம் கண்டு ஆரியப்படை கடந்து நெடுஞ்செழியன் வாகை கொண்ட வெற்றியைவிட, செந்தமிழ்ப் பேராசான் திருவள்ளுவர் புகழ் போற்றுதற்குரியது. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் வெற்றி ஒரு பொழுதே பகையைத் தடுத்தது. நாவலர் வள்ளுவர் வெற்றி ஊழி ஊழிக் காலத்திற்கு வெற்றி கொண்டது. நெடுஞ்செழியன் வெற்றி பகையை மட்டுமே தடுத்தது. பண்பினை வளர்க்கப் பயன்படவில்லை. திருவள்ளுவர் செய்த திருக்குறளோ நந்தமிழ்நெறியினை நஞ்சனைய நெறியின் கலப்பினின்று தடுத்துக் காப்பாற்றியது. நமது சமுதாயத்தை வாழ்வாங்கும் வாழும் நெறியில் வழி நடத்தியதன் மூலம் பண்பியலையும் பேணிக் காத்து வந்திருக்கிறது.

வள்ளுவம் வையகத்தின் வரலாற்றுச் சந்திப்பில் பிறந்தது. வீழ்ச்சியைத் தடுத்து நிறுத்தப் பிறந்தது; தேங்கிக் கிடந்த சமுதாயத்தில் தெளிவு காணப் பிறந்தது. நூல்கள் பல கற்பதிலும் நுண்ணிய

அறிவு ஆற்றலுடையதெனக் காட்டப் பிறந்தது. கல்வி, கற்கின்ற ஆற்றலைப் பொறுத்ததல்ல. கசடு அறுதலிலேயே இருக்கிறது என்று உணர்த்தப் பிறந்தது. மண் வழிப்பட்ட உடமைகளினும் உள்ளம் உடமையே உடமையென உணர்த்தப் பிறந்தது. ஆனதைத் கதை யாக்கிக் கவலையாக்கிச் சாகாமல் தடுக்க—ஆவது காட்டப் பிறந்தது. நிலத்தில் தூய்மை, உடலில் தூய்மை, நெற்றியில் தூய்மை இவை யனைத்தும் கைகள் செய்பவை. இந்தத் தூய்மை பெருகி வளர்ந்தும் பேணும் சமுதாயம் பகையினின்று விடுதலை பெற்றபாடில்லை. காழ்ப்பின் தோற்றம் காசுகளிலில்லை. கலகங்களின் தோற்றம் கடவுளிடத்திலில்லை. கொலையுணர்வின் தோற்றம் கொடுவாளிடத்திலில்லை. உருக்குலைக்கும் உட்பகையின் தோற்றம் உடலின்கண் இல்லை. ஆங்கார உணர்வின் தோற்றம் அழகிய நெற்றியின்கண் இல்லை; ஆங்கிலங்கும் நீற்றின் கண்ணும் இல்லை. பின் எங்கு? நஞ்சின் நிலைக்களம் மனமேயாம். மனத்துள் கருப்பு வைத்து மாநிலம் முழுதும் தூய்மை செய்தாலும் பயனில்லை என்று பாங்குறக் காட்டி, மனத்தின் கண் மாசறுக்கப் பிறந்தது வள்ளுவம்.

மனிதன், உருவெளித் தோற்றத்தால் தனி மனிதன்; மக்கட் கணக் கெடுப்பில் தனி மனிதன்; வயிற்றால்—வாயால் தனி மனிதன். ஆயினும் அவன் படைத்திடும் வாழ்க்கை, தனி மனித வாழ்க்கையன்று—சமுதாய வாழ்க்கை—கூட்டு வாழ்க்கை! அவனிடத்தில் உருவாகித் தோன்றும் உணர்வுகள் உலகம் தந்த உணர்வுகளேயாம். ஈண்டு உலகம் என்பது மனித சாதியைப் போல எளிதில் ஒழுக்கங்களைக் கடப்பனவல்ல; முறைகளை மீறுவன அல்ல; நீதிகளை நீப்பன அல்ல. இயற்கை உலகில் மாற்றங்கள் உண்டு. ஆனால், ஏமாற்றங்கள் இல்லை. மனித சாதியிலோ முறைகளை எளிதில் கடந்த சீலச் சிதைவினையும் ஏமாற்றங் களையும் வரலாறுகள் படம் பிடித்துக் காட்டுகின்றன; இலக்கியங்கள் எடுத்துக் கூறுகின்றன. கீழே விழுந்து விடாமல் தம்மை அடிக்கடி தூக்கி நிறுத்திக் கொண்ட மனிதசாதி கெட்டதைப் போலச் செடிகள் உலகம் கெடவில்லை; கொடிகள் உலகம் கெடவில்லை; விலங்குகள் உலக மும் கெடவில்லை. ஆனால், மனிதனே தம்பட்டம் அடித்துக் கொள்ளு கிறான். விலங்குகளுக்கு ஐந்து அறிவாம் இவனுக்கு ஆறாவது அறிவாம். ஐயகோ! மனிதர்களே! வாயும் வார்த்தைகளும் கிடைத் தமையால் ஏன் இப்படி வையகத்தை ஏமாற்றுகிறீர்கள்? எங்கே இருக் கிறது உங்கள் ஆறும் அறிவு? நுமக்கு அறிவு இருப்பதின் அடையாளம் என்ன? அதற்குப் பதில் ஆரவாரம்தானே? விலங்குகளும் துன்பம் அனுபவிக்கின்றன. ஆனால், ஓர் அதிசயம். விலங்குகள் அனுபவிக்கும் துன்பம் பெரும்பாலும் இயற்கை வழியில் வந்த துன்பங்கள். ஒரோவழி அறிவின்மையின் காரணமாகச் சில அலுவல்களையும் அடைகின்றன. ஆயினும், மனித சாதியைப்போல் செயற்கை இன்பங்களும், செயற்கைத் துன்பங்களும் விலங்கினத்திற்குக் கிடையா. அறிவிருப்பதைக் காட்டுதற் குரிய அன்பு பிறந்திருக்கிறதா? மேடையில் தான் பிறக்கிறது! வணிகம்

தான் நடைபெறுகிறது என்று இடித்துக் கேட்க—'அறிவினுல் ஆகுவ துண்டோ பிறிதின் நோய் தந்நோய் போல் போற்ருக் கடை' என்று வள்ளுவம் பிறந்தது.

வாழ்க்கை என்பது என்ன? ஒன்றரை அடியில் பிறந்து ஆறடிக்கு வளர்ந்து மண்ணுக்கு உரமாகவோ? நிலத்தில் விளைந்தவைகளைத்தின்று திரிந்து கதை முடிக்கவோ? உண்ட உணவின் கொழுப்புகளால் விளைந்த உடலெரிச்சலைக் கூடித் தணித்துக் கொள்ளவோ? இல்லை, இல்லை! மனிதன்—அவனே வையகத்தின் நாயகன்! கடவுளின் சாட்சியாக விளங்க வேண்டியவன். அவன் வாழ்வாங்கு வாழ்ந்தால் வையகம் வளரும்; வானகம் மண்ணுக்கு வரும். அங்ஙனம் வாழ்தல் வாழ்க்கையெனக் காட்ட, வையத்துள் வாழ்வாங்கு வாழ்க என வள்ளுவம் பிறந்தது.

மண்ணுக்கு இயற்கையில் உயிர்ப்பாற்றலிருக்கிறது. அந்த உயிர்ப் பாற்றலின்வழி இழுத்தெறியப்படாமல் மேலே உயர உயர ஓங்கி இயற்கை ஆற்றலும் தந்தது. விலங்குகளுக்குக் கால்களும், மரம் செடி கொடிகளுக்கு வேர்களும் கிளைகளும் அந்த நோக்கத்துடனே அமைந் தனவாம். மரம் செடி கொடிகள் மண்ணிடை வேர் பாவிக் கிளைகள் விட்டு அதன் உயிர்ப்பாற்றலின் சக்தியைத் தடுத்து நிறுத்தித் தன்னை இழுத்தெறியும் ஆற்றலுடைய மண்ணையே தான் நின்று வளரும் களமாக மாற்றி, தான் வளர்வதோடன்றிப் பூத்துக் குலுங்கிக் காய்ப்ப தோடன்றி விலங்குகளுக்கும் மனித உலகத்திற்கும் கூட வாழ்வளிக்கின் றன. ஆனுல், மனிதனே, மண்ணின் ஆற்றலால் உடல் மட்டுமின்றி உள்ளத்தையும் பறிகொடுத்துத் தானும் வாழாமல் மற்றவர்களுக்கும் வாழ்வளிக்காமல் பயனின்றி நடமாடுகின்ருன். அதனுலேயே வாழ் வாங்கு வாழ்தலை தெய்வமாக்கினுன். வள்ளுவர் காலத்தில் மனிதர் பூசித்தது தெய்வத்தை. பூசிப்பவன் 'சாத்தான்' ஆனுல், பூசனையால் வரும் பயனென்ன? தெய்வமணம் கமழும் இனநலம் உடையவனே தெய்வத்தைப் பூசித்தற்குரியவன். சாத்தானின் இடம் சுடுகாடு. தெய்வங்களின் இடம் மனித இனம் நடமாடும் மலர்ச் சோலை; திருக்கோயில்கள். ஆதலால், சாத்தானுக விளங்கும் மனிதனை தெய்வ மாக்கவே வள்ளுவம் பிறந்தது. 'வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வம்' என்று வள்ளுவம் பேசுகிறது.

வள்ளுவம் ஏன் பிறந்தது? என்று இதயத்தில் பட்டதை எழுதி யிருக்கின்ருேம். வள்ளுவம், பதவுரை பொழிப்புரைக்காகப் பிறக்கவில்லை மண் செழிக்க மழை பொழிவது போல, மனித குலம் செழிக்க—மனிதகுல உள்ளங்கள் செழிக்க - உலகு செழிக்க—உயர் கடவுள் சிரித்துமகிழ வள்ளுவம் பிறந்தது! முடிந்தால்—மனமிருந்தால் வள்ளுவம் பிறந்ததன் பயனையடைய வழி காணுங்கள்! வையகம் சிறக்கும்! அல்லது வழக்கம் போல வாழ்த்துரைகளில் வாணளை வீணுக்குங்கள்! அது உங்கள் விருப்பம்! வள்ளுவரே, 'ஏவவும் செய்கலான் தான் தேரான்' என்று நொந்து கூறியுள்ள பொழுது நாம்தான் என்ன செய்ய முடியும்?

# சென்ற இதழில் எழுப்பிய
# பொது அறிவு வினாக்களுக்கு விடைகள்



**9. உருவ வழிபாடு வேண்டுமா?**

கடவுள் கொள்கையுடைய சில சமயத்தினரும் உருவ வழிபாட்டை ஏற்றுக்கொள்வதில்லை. இந்து சமயமோ உருவ வழிபாட்டைச் சிறந்ததாகக் கொண்டிருக்கிறது. நம்மைப் படைத்து நமக்கு வேண்டிய அனைத்தையும் படைத்த கடவுளுக்கு நன்றி செலுத்துவது அவனை வழிகடுவதேயாகும். கண்ணுக்குப் புலப்படாத (சூக்குமமான) இறைவனை கண்ணுக்குப் புலப்படும் (தூலமான) ஒன்றை வைத்தே வழிபட முடியும். மனித உருவத்திலுள்ள நாம் நம்மைப் போன்ற உருவத்தை வைத்தே வழிபட வேண்டும். கடவுள் எங்குமிருந்தாலும் ஒரு இடத்தில் ஓர் உருவத்தில் ஒரு நாமம் இட்டே வணங்குதல் முறை. பசுவின் உடல் முழுதும் பால் இருப்பினும் மடி வழியாக அன்றோ பால் சொரிகிறது. அதைப்போல் உருவத்தால் இறைவன் அருள் பாலிக்கிறான். குழந்தைக்குப் படத்தைக் காட்டித்தானே பாடஞ் சொல்லிக் கொடுக்கிறோம். அகவழிபாட்டினும் புறவழிபாடே சிறந்தது. புறவழிபாட்டில் தான் மனம், வாக்கு, காயம் என்ற மூன்றும் பயன்படுகிறது. குரங்கு போல் அலையும் மனத்தை ஒருவழிப் படுத்த உருவ வழிபாடு தேவை. உருவங்களுக்கு மந்திர சக்தியும் உண்டு. மன்னர், நாட்டுத் தலைவர், குரு, தாய் தந்தையர் முதலியோர் படத்தையும் சிலைகளையும் வைத்து நாம் வணங்கவில்லையா? எனவே எல்லாவற்றையும் படைத்தளித்த இறைவனை நாம் உருவமைத்து வழிபடுதல் முறையல்லவா? தலைசிறந்த ஞானியர்களான நாயன்மார்களும் ஆழ்வார்களும் உருவ வழிபாடு செய்தார்கள். ஆகவே உருவ வழிபாடு வேண்டும்.

**10. சிவன் கோயிலிலுள்ள சந்நிதிகளையும் அவை காணப்பெறும் இடங்களையும் சுருக்கமாக வரைக.**

சிவன் கோயில்கள் பெரும்பாலும் கிழக்கு நோக்கியிருக்கும். கோபுரத்தின் வெளிப்புறம் இருமருங்கும் துவார கணபதி, துவார முருகன் சந்நிதிகள். உள்ளே கிழக்குப் பிரகாரத்தில் சூரியன், சந்திரன், பைரவர் சந்நிதிகள். தெற்குப் பிரகாரத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்; மேற்குப் பிரகாரத்தில் கணபதி, முருகன், திருமகள்; வடக்குப் பிரகாரத்தில் சண்டேசுவரர் சந்நிதிகள். கர்ப்பக்கிரகச் சுவர்களிலுள்ள பிறைகளில் தெற்கே தென்முகக் கடவுள்; மேற்கே இலிங்கோத்பவர் அல்லது அண்ணாமலை நாதர்; வடக்கே நான்முகன், துர்க்கை ஆகியோர் எழுந்தருளியிருப்பர். சுவாமி (சிவலிங்கம்) சந்நிதி கிழக்கு நோக்கி நடுவே இருக்கும். அதற்கு இடப்பக்கத்தில் அம்பிகை சந்நிதியிருக்கும். வடக்குப் பக்கத்தில் தெற்கு நோக்கி நடராசப் பெருமானும் சிவகாமி அம்மையாரும் காட்சி தருவர். வடமேற்குப் பிரகாரத்தில் நவக்கிரகங்கள் இருக்கும். சுவாமிக்கு எதிரே நந்தி, கொடிமரம், பலிபீடம் இவை காணப்பெறும்.

௨

சிவமயம்

# அழுது அடி அடைந்த அன்பர்

திரு. க. கலியாணம், எம்.ஏ., டிப். எக்கான்.,

சைவ சமயநூல்கள் தோத்திர நூல்கள், சாத்திர நூல்கள் என இரு வகை. அன்பு நூல்கள், அறிவு நூல்கள் என்றும் சொல்லலாம். இறைவனை வழிபட்டு அவன் திருவருளுக்குப் பாத்திரமாவதற்கு உகந்தவை தோத்திர நூல்கள். கடவுள், உயிர், உலகம் இவற்றின் உண்மையை நிலைநாட்ட எழுந்தவை சாத்திர நூல்கள். இந்த இரு வகை நூல்களையும் பன்னிரு திருமுறைகள், பதினான்கு சாத்திரங்கள் என்பர் ஆன்றோர். பன்னிரு திருமுறைகளை இயற்றியவர் இருபத்தேழு ஆசிரியர்கள். எட்டாம் திருமுறையாகிய திருவாசகம், திருக்கோவையார் என்ற நூல்களை அருளியவர் மாணிக்கவாசகப் பெருமான். இவருடைய திருநட்சத்திரம் ஆனி மகம் 4-7-1973 அன்று வருகிறது. இவ்வமயம் அவருடைய வரலாற்றையும் நூலையும் பற்றிச் சிந்திப்பது மிகவும் பொருத்தமானது. இவற்றை அறிந்து கொள்வதற்கு ஆதாரமாக உள்ளவை ஆலாசிய மான்மியம், ஆதிகைலாசமான்மியம், மணிவாசக புராணம் என்ற வடமொழி நூல்களும், கடம்பவனபுராணம், பெரும் பற்றப்புலியூர்நம்பி திருவிளையாடற்புராணம், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் திருப்பெருந்துறைப் புராணம், உத்தரகோச மங்கைப்புராணம், கடவுள் மாமுனிவரின் திருவாதவூரடிகள் புராணம் முதலிய தமிழ் நூல்களும் ஆகும். இவை யன்றி, கா. சுப்பிரமணிய பிள்ளையின் "மாணிக்கவாசகர் வரலாறும் ஆராய்ச்சியும்", மறைமலையடிகளாரின் "மாணிக்கவாசகர் காலமும் வரலாறும்", சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணியமுதலியாரின் "மாணிக்கவாசகர் அல்லது நீத்தார் பெருமை" என்ற உரைநடை நூல்களும் படித்து இன்புறத்தக்கன.

இவர் பிறப்பதற்குப் பெரும் பேற்றைப் பெற்றது திருவாதவூர். தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டில் மதுரையிலிருந்து பதினைந்து கல் தொலைவிலுள்ளது. தந்தை தாயர்-சம்பு பாதாசாரியர், சிவஞானவதி என்று மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் திருப்பெருந்துறைப் புராணத்தில் கூறியிருக்கிறார்கள். தந்தையார் பெயர் சுந்தர நாதர் என்று வடமொழி ஆலாசியமான்மியம் கூறுகிறது. அவருடைய குலம் ஆதிசைவஅந்தணர், அமாத்தியர், ஆராத்தியர், மாமாத்திரர் என்று பலவகையாகக் கூறப்பெறுகிறது. இவருடைய பெயர் திருவாதவூரர். இயற்பெயர் தெரியவில்லை. அரசனால் வழங்கப்பெற்ற பட்டம் "தென்னவன் பிரமராயன்" என்பது. இறைவன் கொடுத்தருளிய பெயர் மாணிக்கவாசகர் என்பதாகும். பதினாறு வயதிற்குள் எல்லாக் கலைகளையும் கற்றுத் தேர்ந்தார். "எக்கலையும் கற்றுணர்ந்தார் ஈரெட்டாண்டு அகவையினில்" என்பர் கடவுண் மாமுனிவர். இவர் காலத்தில் மதுரையிலிருந்து அரசாண்ட மன்னன் அரிமர்த்தன பாண்டியன். இவர் மூவர் முதலிகளுக்கும் முற்பட்டு வாழ்ந்திருந்தவர் என்றும், அவர்களுக்குப் பின்னால் இருந்தவர் என்றும், ஆய்வாளர்களிடையே இருகருத்துக்கள் நிலவுகின்றன. முடிவாக எதுவும் கூறுதற்கில்லை. "ஆயக்கடவன் நானேதான் என்னதோ இங்கு அதிகாரம்" என்ற அடிகளாரின் அடிகளை எண்ணி அமைதல் நலமானது.

அவருடைய வரலாற்றுக்கு ஆதரமாக மேலே சொல்லப்பெற்ற நூல்களில் சிற்சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. என்ருலும், பொதுவாக அவர் வரலாற்று நிகழ்ச்சிகளில் அதிகம் வேற்றுமை காணப் பெறவில்லை. அவர் அரிமர்த்தனனிடம் அமைச்சராய் அமர்ந்தது, குதிரை வாங்கச் சென்றது, பெருந்துறையில் ஞானுேபதேசம் பெற்றது, இறைவன் அவருக்காக ஆவணி மூலத்தன்று குதிரைகள் கொண்டு வந்தது, பரிகள் நரியானது, அரசன் அமைச்சரைத் தண்டித்தது, வையையில் வெள்ளம் பெருகியது, இறைவன் கூலியாளாக வந்து பிட்டுக்கு மண் சுமந்து பிரம்படி பட்டது, அரசன் அவருடைய பெருமையறிந்தது, அவர் புத்தரை வாதில்வென்றது, தில்லையம்பலத்தில் இறைவனே திருவாசகத்தின் பொருளெனக்காட்டி இரண்டறக் கலந்தது, முதலிய நிகழ்ச்சிகளை யாவரும் அறிந்தது. அவர் வரலாற்று நிகழச்சிகளுக்கு அவருடைய பாடல்களிலேயே அகச்சான்றுகள் இருக்கின்றன.

மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தில் 51 பதிகங்களும், 658 பாடல்களும் உள்ளன. அந்நூலின் பெருமையை நாம் அறிந்து கொள்வது மிகவும் அவசியம். இறைவனே தன் கையால் எழுதி கையெழுத்திட்டது. "திருவாசகத்திற்கு உருகார் ஒருவாசகத்திற்கும் உருகார்" என்ற பழமொழியெழக் காரணமானது. கிறித்துவ சமயம் பரப்ப வந்த பாதிரியாரான போப்பையர் தாம் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த மூன்று நூல்களில் திருக்குறள், நாலடியார் இரண்டும் நீதி நூல்கள்; திருவாசகம் சமயநூல். மிகப் பழங்காலத்தில் இந்நூல் கடல் கடந்தும் சென்றது. சயாம் அரசர் முடிசூட்டு விழாவில் திருவாசகம் பாடப்பெறும் பழக்கம் ஏற்பட்டது. ஊழிக்காலத்தில் தன் தனிமையைப் போக்கிக் கொள்வதற்காகவே திருவாசக ஏட்டுப் பிரதியொன்றும் எழுதிக் கையில் வைத்துக் கொண்டார் என்று சுந்தரம்பிள்ளை கற்பனை நயம் பெறக் கூறியிருப்பது அறிந்து மகிழத்தக்கது. "தேவர் குறளும்" என்று தொடங்கும் பாடலில் 'திருவாசகமும் திருக்கோவையாரும்' சிறந்த நூல்கள் என்று குறிக்கப் பெற்றிருக்கிறது. திருவாசகமென்னும் தேன் பிறவிநோய் நீக்கி, துன்பத்தையகற்றி, ஆனந்தத்தை யளித்து, வீடு பேற்றினை நல்கும் என்ற பொருள் பொதிந்த "தொல்லையிரும் பிறவி" என்ற பாடலை அறியாதார் எவரும் உளரோ! மார்கழித் திங்களில் அவர் அருளிய திருவெம்பாவைப் பாடல் நாடெங்கணும் முழங்கக் காண்பது அதன் மகிமையைக் காட்டுகிறதன்ருே! நூலின் பெருமை அளவிடற் கரியது; விரிவஞ்சிச் சுருக்கிக் கூறினேம்.

'பாவை பாடிய வாயால் கோவை பாடுக' என்று இறைவனே ஆணை யிட்டதாக ஒரு பழமொழி வழங்குகிறது. அதில் அகப்பொருட்துறைப் பாடல்கள் 400 அடங்கியுள்ளன. திருக்கோவையார் என்ற இந்நூல் மாணிக்கவாசகர் இயற்றவில்லை யென்று ஒரு சில ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். எனினும் சைவசமயத்தினர் இரண்டு நூல்களும் மாணிக்கவாசகரே இயற்றியதாகப் போற்றி வருகின்றனர். அண்மையில் வரும் அவர் திருநட்சத்திரமான ஆனிமகத்தை யொட்டி நாம் அனைவரும் திருவாசகத்தை ஓதி இறைவன் திருவருளுக்குப் பாத்திரமாவோமாக.

எழுதருமறைகள் தேரு இறைவனை எல்லில் கங்குல்
பொழுதறு காலத்தென்றும் பூசனைவிடாது செய்து
தொழுதகை தலைமேலேறத் துளும்பு கண்ணீருள் மூழ்கி
அழுதடியடைந்த அன்பர் அடியவர்க்கு அடிமை செய்வாம்.




## ஸ்ரீ மணவாள மாமுனிகள்

வித்துவான் திரு. கா. அ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,

உலகில் தருமம் குறைந்து அதருமம் மேலோங்குகிற காலத்திலும் பகவானுக்குத் தொண்டு செய்கின்ற பக்தர்களுக்குத் தொல்லை ஏற்படுகின்ற காலத்திலும், இறைவன் தானே இவ்வுலகில் பல அவதாரங்களைச் செய்து தருமத்தை நிலைநாட்டிப் பக்தர்களைக் காப்பாற்றியுள்ளான். அதுபோலவே வேதங்களை ஏற்றுக் கொண்ட வைதிக சமயங்களுக்குப் புறசமயங்களாலே ஆபத்து வருகின்ற காலத்திலும், இவ்வுலகில் பல ஆசாரியர்கள் தோன்றி வைதிக சமயங்களையும் தருமங்களையும் அரும்பாடுபட்டுக் காப்பாற்றியுள்ளார்கள். அப்படிப்பட்டவர்கள் வரிசையில் வைணவ சமயத்தில் தோன்றிப் பெருந்தொண்டாற்றிய ஸ்ரீராமானுசரே தலைசிறந்தவர் அவருக்கு முன்னும், பின்னும் எவ்வளவோ ஆசாரியர்கள் தோன்றி யிருப்பினும் அவரைப் போல் குமரி முதல் இமயம் வரை யாத்திரை செய்து "விசிட்டாத்துவைதம்" என்ற சிறந்த கொள்கையாலே மற்றவர்களை வென்று பேரும் புகழும் பெற்றவர் எவரும் இலர்.

ஸ்ரீராமானுசருடைய நூல்களெல்லாம் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்களுடைய திவ்வியப்பிரபந்தத்தை அடிப்படையாகக் கொண்டவையே என்றாலும், அவைகளெல்லாம் வடமொழியிலிருப்பதால் எல்லோரும் படித்து அறிந்து கொள்ள முடியாத நிலையில் இருந்தது. அக்குறை தீர யாவரும் படித்து இன்புற்று உய்யும் வண்ணம் திவ்வியப் பிரபந்தங்களுக்கு 'மணிப்பிரவாள' நடையில் உரை வகுத்து உதவியவர்களில் பெரியவாச்சான் பிள்ளை, நம்பிள்ளை போன்றவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள். அவர்களுக்குப் பின்னே, ஆழ்வார்களின் அருளிச் செயல்களாகிற திவ்வியப்பிரபந்தங்களின் ஆழ்பொருள்களை வாரி வழங்கியவர் ஸ்ரீமணவாள மாமுனிகள். இவ்வாசாரியப் பெருந்தகையார் ஸ்ரீராமானுசரின் மறு அவதாரம் என்றே போற்றப் பெறுவர். ஞானம், பக்தி, வைராக்கியம்-என்ற அணிகளாலே அலங்கரிக்கப் பெற்றவர்.

ஸ்ரீமணவாள மாமுனிகள் பாண்டி நாட்டில் ஆழ்வார் திருநகரிக்கு அருகேயுள்ள 'சிக்கில் கிடாரம்' என்ற க்ஷேத்திரத்தில் விசய வருடம் ஐப்பசித் திங்களில் திருமூல நன்னாளில் அவதரித்தவர். இவருடைய தந்தையார் திகழக் கிடந்தார் அண்ணர். தாய் ஸ்ரீரங்கநாச்சியார். இவர் திருவாய் மொழிப்பிள்ளையிடம் திருவாய் மொழி முதலான திவ்வியப்

பிரபந்தங்களையும், ஈடு முதலான பகவத் விடயங்களையும் கற்று அறிந்தார். மற்றும் 'ஸ்ரீபாடியம்' முதலான வேதாந்த நூல்களையும், தத்துவத்திரயம்' முதலான இரகசியக் கிரந்தங்களையும் கிடாம்பி திருமலை சுவாமியிடம் பயின்று சகல சாத்திர வித்தகராய்த் திகழ்ந்தார். இவருக்கு வடமொழியில் 'விசதவாக்சிகாமணி' என்ற விருதுப் பெயரும் உண்டு. இவர் திருவரங்கத்தையே இருப்பிடமாகப் பெற்று வாழ்ந்தவர்.

ஸ்ரீமணவாள மாமுனிகளுக்கும் ஸ்ரீ எம்பெருமானுர் என்கிற இராமநுசருக்கும் பலவகைகளிலும் ஒற்றுமை உண்டு "த்வயம்" என்னும் மந்திரத்தை எப்பொழுதும் சொல்லிக் கொண்டு திருவரங்கம் என்னும் திருப்பதியிலே ஸ்ரீ இராமாநுசர் திருத்தொண்டுகளைச் செய்து கொண்டிருக்க வேண்டுமென்பது திருவரங்கனின் கட்டளை. அதுபோலவே அரங்கன் மாமுனிகளின் நாவீற்றின் பெருமையை யுணர்ந்து திருவாய்மொழியின் உரையாகிய இணையில்லா 'ஈட்டை' விவரமாகத் தன் சந்நிதியிலேயே பெரிய திருமண்டபத்தில் உபந்நியாசம் செய்யும்படி அருச்சகர் வழியாகக் கட்டளையிட்டான். அக்கட்டளைப்படியே திருவாய்மொழியின் அகல உரையாகிய 'ஈடு' என்னும் உரையை மிகவும் அழகாக விரித்துரைக்கும் பொழுது திருவரங்கனே ஒரு குழந்தை வடிவில் சீடர்களில் தானும் ஒருவனுக அமர்ந்து, கைகட்டி, வாய் பொத்தி மாமுனிகளை ஆசாரியராக ஏற்று அவர் கூறும் அரும் பெரும் பொருள்களைக் கேட்டு ஆனந்தமடைந்தான். இவ்விதம் தன் சந்நிதியில் ஓராண்டுக் காலம் எல்லாத் திருவிழாக்களையும் நிறுத்திவிட்டுத் தானே சீடனுய் அமர்ந்து திராவிட வேதசாரமாகிய திருவாய் மொழியின் செழும்பொருளைக் கேட்டு இன்புற்று முடிவில் சாற்றுமுறை நாளன்று "ஸ்ரீசேலேசதயா பாத்திரம்" என்று தொடங்கும் அழகிய தனியனை மாமுனிவன் விடயமாக இயற்றியருளினுன். இந்த ஒரு நிகழ்ச்சியே இவ்வாசாரியன் செந்நாப்புலமைக்குச் சான்ருகுமன்ரே!

இன்றைக்குத் தமிழ்வேதமகிய திருவாய்மொயின் செழும் பொருளைக் கண்டும், கேட்டும் பக்தர்கள் பரவசமடைகிருர்களென்ருல் அதற்கு முற்றிலும் ஸ்ரீமணவாளமாமுனிகளே காரணமாவார். இக்கருத்தை வலியுறுத்தும் அப்பிள்ளார் என்பவருடைய பாடலைப் பாருங்கள்.

சேற்றுக் கமல வயல்சூ ழரங்கர்
　　தஞ்சீர் தழைப்ப
போற்றித் தொழு நல்ல வந்தணர்
　　வாழவிப் பூதலத்தே
மாற்றற்ற செம்பொன் மணவாள
　　மாமுனி வந்திலனேல்
ஆற்றிற் கரைத்த புளியல்ல வோ
　　தமி ழாரணமே.

இப்பாடலால் மாற்றற்ற செம்பொன்னுய்த் திகழும் ஸ்ரீமணவாள மாமுனிகள் இவ்வுலகில் அவதரிக்கவில்லையென்ருல் தமிழ் வேதங்

களாகிய திவ்வியப்பிரபந்தங்கள் ஆற்றில் கரைத்த புளிபோலப் பயனற்றுப் போயிருக்கும் என்று விளங்குகின்றதன்றே! இவ்விதம் ஸ்ரீ மணவாள மாமுனிகள் அவதாரம் செய்யாதிருந்தால்" 'கடலோசையைப் போல்' திருவாய் மொழியும் பொருளின்றிப் போயிருக்கும்" என்று மாமுனியைப் பற்றிக் கோயிற் கந்தாடை அண்ணன் இயற்றிய 'கண்ணிநுண் சிறுத்தாம்பில்' கூறியிருப்பதையும் காணலாம்.

இவ்விதம் திருவாய்மொழியுடன் 'ஈட்டு வியாக்கியானத்தை விளக்கமாக உபதேசித்து ஸ்ரீ அழகிய மணவாளனாகிய அரங்கநாதனாலேயே "முப்பத்தாறாயிரப் பெருக்கர்" என்ற பட்டப் பெயரையும் பெற்றவர் மாமுனிகள். இவர் ஸ்ரீ நம்மாழ்வாரிடத்திலும், ஸ்ரீராமாநுசரிடத்திலும் அளவு கடந்த பக்தியைச் செலுத்தியவர். இராமாநுசரை வணங்கி இராமாநுச நூற்றந்தாதியை ஓதி அவனடியார்களோடு கூடியிருப்பவர்கட்கு மோட்சம் நிச்சயம் உண்டு என்பதைத் தாமியற்றிய ஆர்த்திப் பிரபந்தத்தில் மிகவும் அழகாகக் கூறியுள்ளார். அப்பாடலை இங்கே காண்போம்.

நந்தா நரகத் தழுந்தாமை வேண்டில் நானிலத்தீர்
எந்தாதை யான எதிராசனை நண்ணும் என்று மவ
னந்தாதி தன்னை யனுசந் தியுமவன் தொண்டருடன்
சிந்தாகுலம் கெடச் சேர்ந்திடும் முத்திபின் சித்திக்குமே

இவ்வாறு இராநுசரிடத்தில் பக்தி பூண்ட ஸ்ரீ மாமுனிகள் திருவரங்கம் பெரிய கோயிலையே இருப்பிடமாகக் கொண்டு செங்கோலுடைய திருவரங்கச் செல்வனாரின் அருளுக்கு இலக்காகிப் பல காலம் வாழ்ந்தார். மாறன் கலையாகிய திருவாய் மொழியே இவருக்கு உணவு. நம்மாழ்வாரை யன்றித்தெய்வம் வேறு இல்லை என்று வாழ்ந்த மதுரகவியின் நிலையே இவரது நிலை. தமக்கு முன்னே தோன்றிய பிள்ளை லோகாசாரியர், அழகிய மணவாளப் பெருமானார் நாயனார் போன்ற பரமாசாரியர்களுடைய அருள் மொழிகளையும், பட்டர், நஞ்சீயர் நம்பிள்ளை' பெரிய வாச்சான்பிள்ளை போன்றவர்களுடைய உரைவிசேடங்களையும் பொழுது போக்காகக் கொண்டவர். அதோடு சிறந்த ஆன்மகுண நிறைவுடையவர். ஆசூயை என்கிற பொறாமையை அறவே வெறுத்தவர். இதைத் தாமியற்றிய ஆர்த்திப்பிரபந்தத்தில்

"பிறர் மினுக்கம் பொறாமை யிலாப் பெருமையும் பெற்றோமே."

என்று தாமே கூறியுள்ளார்.

பேரறிவாளரான மணவாள மாமுனிகள் பரமசாதுவாய் அடக்கம், அன்பு, எளிமை, பொறுமை முதலிய குணங்களாலே பெரிதும் கொண்டாடத் தக்கவராக விளங்கினார். வாதம் செய்து மற்றவர்களை வெல்லும் காலத்திலும், பிறமதத்தினரைக் கருத்து வேறுபாட்டின் காரணமாகக் கண்டிக்கின்ற நேரத்திலும் பெருந்தன்மையாகக் கூறுவாரே யன்றிப் பிறர்மனம் புண்படும்படிக் கடுமையாகக் கூறமாட்டார்.

ஸ்ரீவைணவ குருபரம்பரையில் கடைசி ஆசாரியாராகையாலே, முன்னோர்கள் இயற்றிய எண்ணற்ற நூல்களைக் காத்துத் தேவையான சிறிய பணிகளைச் செய்வதே சிறந்ததென்று திருவுள்ளம் கொண்டு சில நூல்களை மட்டுமே இயற்றியருளினர். 'திருமந்திரார்த்தம்' தத்துவத் திரய வியாக்கியானம், ஸ்ரீவசனபூடணவியாக்கியானம், ஆசாரிய இருதய வியாக்கியானம் என்கிற இந்த வியாக்கியானங்களையும், ஞானசாரம், பிரமேயசாரம் என்கின்ற நூல்களின் வியாக்கியானங்களையும் மணிப் பிரவாள நடையில் மிகவும் அழகாக இயற்றியுள்ளார். இவ்வியாக்கி யானங்களைப் படிப்பவர்கள் இவருக்குள்ள தமிழ்மொழி, வடமொழிப் புலமையையும், சகல சாத்திரங்களிலுள்ள பயிற்சியையும் நன்கு அறிவர். மற்றும் வடமொழியில் 'யதிராசவிம்சதி' என்ற இராமாநுசரைப் பற்றிய நூலையும், 'தேவராச மங்களம்' என்கிற காஞ்சியிலுள்ள வரதராசனைப் பற்றிய நூலையும், பிரமாண சங்கிரகம் என்கிற நூலையும் இயற்றியுள்ளார். நம் செந்தமிழில் உபதேச ரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப் பிரபந்தம் என்கிற நூல்களையும் அருளியுள்ளார். மற்றும் திருவாராதனக்கிரமம் என்ற பூசைக்குரிய விதிமுறைகளைப் பற்றிய பயனுள்ள நூலையுமருளியுள்ளார்.

பரம காருணிகரான ஸ்ரீ மணவாள மாமுனிகள் தாம் வாழ்ந்த காலத்தில் தம்மைச் சரணடைந்த சீடர்களில் (1) வானமாமலை சீயர் (2) பட்டர்பிரான் சீயர் (3) திருவேங்கடராமாநுசசீயர் (4) கோயில் கந்தாடை அண்ணன் (5) பிரதிவாதி பயங்கார் அண்ணன் (6) எறும்பி யப்பா (7) அப்பிள்ளை (8) அப்புள்ளார் என்கிற எட்டுப்பேரைத் தேர்ந் தெடுத்து அவர்கள் வழியாக ஸ்ரீவைணவ சமயமும், ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களும் எங்கும் பரவித் தழைக்கும்படி ஏற்பாடு செய்தார். அவ்வெட்டுப் பேரும் ஸ்ரீவைணவ உலகின் எட்டு எல்லைகளுக்கும் எட்டு யானைகளாக இருந்து (அஷ்டதிக்கஜங்கள்) ஸ்ரீ மணவாள மாமுனிகளின் கொள்கைகளைப் போற்றி வைணவத்தைத் தழைத்து ஓங்கச் செய்தனர்.

இவ்விதம் பல்லாற்றானும் சிறப்பு வாய்ந்த ஸ்ரீ மணவாள மாமுனி களின் 600வது ஆண்டு திருநட்சத்திர விழா இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு தமிழகமெங்கும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

இவர் அவதரித்த திருமூல நன்னாளைக் கீழ்வரும் பாட்டால் போற்றுவோமாக.

செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடுநாள்
சீருலகாரியர் செய்தருள் நற்கலைதேசு பொலிந்திடுநாள்
மந்தமதிப்புவி மானிடர் தங்களை வானிலுயர்த்திடுநாள்
மாசறு ஞானியர் சேரெதிராசர்தம் வாழ்வு முளைத்திடுநாள்
கந்தமலர்ப் பொழில் சூழ்குருகாதிபர் கலைகள் விளங்கிடுநாள்
காரமர்மேனி யரங்க நகர்க்கிறை கண்கள் களித்திடுநாள்
அந்தமில்சீர் மணவாள முனிப் பரனவதாரம் செய்திடுநாள்
அழகுதிகழ்ந்திடும் ஐப்பசியில் திருமூலம் அதெனுநாளே.




## வளர்த்தவை ; வளர இருப்பவை

[வித்துவான் திரு. வை. இரத்தினசபாபதி, எம்.ஏ., பி.ஓ.எல்.,]

முன்னுரை :

அருளோசையின் முதன் மணியின் பன்னிரண்டாம் ஓசையாக வரும் இவ்விதழ் நம்மை இரண்டாம் மணியின் தொடக்கத்துக்கு இழுத்துச் செல்லுகிறது. 'மெய்ப் பொருள் காண்பதறிவு' என்ற இப்பகுதியில் இதுவரை வளர்த்த கருத்துக்களை ஒருமுகப்படுத்தித் தொகுத்துக் காட்டு வதன் மூலம் இப்பகுதியைத் தொடர்ந்து படித்துவரும் அன்பர்கள் ஒரு தெளிவை மனத்தில் அமைத்துக் கொள்ளலாம். எதிர்பாராத சில இடையூறுகளால் ஆவணி, ஐப்பசி, பங்குனி ஆகிய இதழ்களில் இப்பகுதிக் கட்டுரை வெளிவரவில்லை, திட்டமிட்டு எழுதப் பெற்ற தலைப்புகளில் மூன்று கட்டுரைகள் நின்று விட்டன. அவை இரண்டாம் மணியின் ஓசைகளாக வெளிவரும். பருப்பொருளாக, புலப்பாட்டுப் பொருளாக இல்லாமல் நுண் பொருளாக அமைந்த அறிவியல் பற்றிய பகுதியையும் படித்து 'உரைகல்' பகுதியில் தத்தம் கருத்துக்களை எழுதி ஊக்கப்படுத்தி வரும் அன்பர்களுக்கு, 'அருளோசை' மூலம் இதுவரை வளர்த்த கருத்துக்களை எடுத்துக்கூறி, வளர இருப்பதற்கு வருகை கூறுவதாக அமைவதே இக்கட்டுரை.

வாழ்வும்; வாழ்வியல் ஆய்வும் :

வாழ்க்கை எது? என்பதைக் காண்பது, காட்டுவது ஆகியவைகள் இன்றைய அறிஞர்களின் நாள்வழிப் பிரச்சினைகள். வாழ்க்கை எது? என்பதைப் பற்றிய பலவகையான கருத்துக்கள் வந்துள்ளன. அறிஞர் கள் அறிவைக் கருவியாக வைத்து ஆராய்ந்து வழங்கிய கருத்துக்களே அவை. வாழ்க்கையைப் பற்றிய அறிஞர்களின் கருத்துக்கள் சரியான வைகளா பிழையானவைகளா என்று ஆய்வு ஒருபுறம் இருக்க, அவர்கள் பயன்படுத்திய அறிவு என்ற கருவி சரியானதா பிழையுடையதா என்று ஆய்வது முக்கியமானது. பொருள்களின் எடையைத் தராசு மூலம் வரையறை செய்கிறோம். ஆனால் தராசு சரியானதுதானா என்று பார்க்க வேண்டியதும் அவசியந்தானே! அவ்வகையில் நின்ற ஆராய்ச்சியே அறிவாராய்ச்சியியல்.

அறிவின் தோற்றம் :

அறிவாராய்ச்சியியலின் முதற்கேள்வி அறிவின் தோற்றத்தைப் பற்றியது. அறிவு இயற்கையா? செயற்கையா? இரண்டன் இணைப்பா? என்பவைகளை முறை முறையாக ஆய்ந்த பெருமக்கள் உளர். அறிவு இரண்டன் இணைப்பே என்பதை ஜெர்மானியத் தத்துவ ஞானியான இமானுவேல் காண்ட் என்பவர் தெளிவுறுத்தினர். தமிழகத்தில் வாழ்ந்த இரட்டைப் புலவர்களின் பணி போல இயல்பாக அமைந்த அறிவானது செயல் முறையால் விளக்கம் பெறுகிறது என்று கொள்வது பொருத்தமான ஒரு கொள்கையாகும்.

மக்களை அறிவாராய்ச்சியிற் புகுத்தும் முறை :

"கற்க; கற்றபின் நிற்க அதற்குத் தக" என்ற முறையானது திருவள்ளுவர் கண்ட பழந்தமிழர் மரபு. மக்கள் அறிவின் வழிப்பட்டு நிற்கும் உயிர்ப் பொருளினர் ஆதலின், அறிவில் ஒரு தெளிவு அமைந்தால் தான் செயற்படுவர். எனவே அறிதலை முதன்மைப்படுத்திச் செயல் முறையைப் பின்னிறுத்தியது தமிழர் மரபு. செயல்முறையை முதன்மைப்படுத்தி, அறிதல் முறையைப் பின்னிறுத்தும் முறை வேத மரபு. ஒரு பொருளை அறிதல் முறையை முன்னிறுத்தித் தத்துவம் என்றும், அதே பொருளை அடையும் முறையைப் பின்னிறுத்தி சமயம் என்றும் அமைத்துக் காட்டியது, பொய் கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித மெய்கண்டார் கண்டமுறை.

தமிழகத்து அறிவாராய்ச்சியியலின் பொதுமை :

"எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்பது போன்ற தொல்காப்பிய நூற்பாக்களாலும், 'காரணப் பெயர்' போன்ற குறியீடுகளாலும், அறிவாராய்ச்சியியலின் குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டே வாழ்வியற் பகுதிகளெல்லாம் அமைக்கப் பெற்றன என்பதை உணரலாம். தமிழக மக்களின் வாழ்வியற் பகுதிகள் எல்லாம் 'அறிவு' என்ற பொதுமையுணர்வால் கட்டப் பெற்றவை. மாக்களினத்திலிருந்து மக்களினத்தை வேறு பிரித்த தமிழக அறிஞர்கள் மாக்களுக்குக் கால் நடைகள் என்ற பெயரை அமைத்தார்கள். மக்களும் காலால் நடப்பவர்களே யெனினும் மாக்களுக்கு மட்டும் அப்பெயர் அமைவானேன்? கால் என்ற சொல்லுக்கு 'மரபு' என்ற பொருள் உண்டு. அறிவின் உதவியால் ஒரு புதிய அமைப்பை உருவாக்கிக் கொள்ளும் தகுதியை உடையவர்கள் மக்கள் என்றும் மரபு முறையை மாற்றிக் கொள்ளும் ஆற்றல் இல்லாதனவாய், சென்ற வழியிலேயே சென்று கொண்டிருக்கும் மாக்களை—மிருகங்களை, மரபு நடைக்கு மாருதவை என்று உணர்த்தும் பொருட்டே, கால் நடை என்றும் வழங்கினர் தமிழர். இவ்வரிய விளக்கம் தமிழர்கள் அறிவாராய்ச்சியியலையே அனைத்திற்கும் அடிப்படையாக அமைத்தார்கள் என்பதை விளக்கி நிற்கும்.

தமிழகத்து அறிவாராய்ச்சியியலின் தனிநிலையுணர்வு :

தமிழர்கள் அறிவாராய்ச்சியையே பொதுமை உணர்வாகக் கொண்டு தம் வாழ்வியற் பகுதிகள் எல்லாவற்றையும் அமைத்தும் இணைத்தும் வாழ்ந்தார்கள் என்பதைக் கண்ட நாம், அவர்கள் அறிவாராய்ச்சியியலில் தமக்கே உரியதாகிய தனிநிலை உணர்வையும் அமைத்து வாழ்ந்தார்கள் என்பதைக் காண மறந்து விடலாகாது. எடுத்துக் காட்டாக தமிழர்கள் இன்றுவரை மேற்கொள்ளும் ஐம்பெரு விழாக்களைக் காணலாம். அறிவின் மூல மூர்த்தியாக விநாயகப் பெருமானை அமைத்தார்கள். அறிவுச் சக்தியின் விரிவாகிய ஒன்பது சக்திகளையும் அமைத்து வழிபடும் விழாவே அடுத்துக் கொண்டாடப் பெறும் நவராத்திரி விழா. ஆணவம் என்னும் அறியாமையை அறிவினால் அழிக்கும் பெருவிழாவே கந்தன் கொள்ளும் சட்டிப் பெருவிழா. மார்கழிப் பாவை விழாவில் உயிர்கள் அறிவைப் பெறுவான் வேண்டி நோன்பிருக்க, அவ்வுயிர்களை ஞானத்தோடு இணைவிக்கவே, பெருமான் ஞானசக்தியை மணம்புரியும் பங்குனி உத்தரப் பெருவிழாவை மேற்கொள்ளுகிறான். பண்டிகை என எதையும் கொண்டாடாமல் அறிவின் அடிப்படையில் சில விழாக்களை அமைத்து அவைகளின் மூலம் பின் வரும் தமிழ்ச் சமுதாயத்துக்கு ஒரு நல்ல பாரம்பரியத்தை உண்டாக்கியிருக்கிறார்கள். இந்திய நாட்டின் பொதுநிலையை நோக்குவோமாகில் தத்துவ ஆராய்ச்சியின் நுழைவாயிலாகக் கருதப்பெறும் அறிவாராய்ச்சியியலைத் தனித்துறையாக அமைத்து ஆராயும் முறை நையாயிகர் ஒழிந்த ஏனைத் தத்துவ அறிஞர்களிடம் காணவில்லை எனலாம். ஆனால் தமிழகத்தில் அறிவாராய்ச்சியியல் தனித்த துறையாகவே ஆராயப் பெற்று வந்தமை காணலாம்.

அறிவாராய்ச்சியியலும் அதனோடு இணைந்த துறைகளும் :

உள்ளத்தியல், அளவையியல், அடிப்படைத் தத்துவ இயல் (Psychology, Logic, Metaphysics) ஆகிய மூன்று துறைகளும் அறிவாராய்ச்சியியலோடு இணைந்துள்ளன. ஆனால் அவைகளைப் பிரித்து நிறுத்தி, அறிவாராய்ச்சியியலை மட்டும் தனித்து ஆராய வேண்டிய கடமை உண்டு. இதுமட்டுமின்றி உள்ளத்தியலை (Psychology) மட்டும் மூன்றாகப் பிரித்து, அறிவு (Cognition), இச்சை (Vocition or Affection), செயல் (Conation) என அவைகளுக்குப் பெயரிட்டு உள்ளத்தியலின் ஒரே ஒரு பகுதிதான் அறிவாராய்ச்சியியல் என்று கூறும் பிரிப்பு முறையும் உண்டு. உள்ளத்தியலார் (Psychlogists) கூறும் இம்மூன்றையும் தமிழகச் சான்றோர் மனம், உள்ளம், நெஞ்சம் மூன்றாகக் குறிப்பிட்டு விளக்கியுள்ளனர். இப்பிரிப்பு முறைகளை நன்றாக உளங்கொண்டு, அறிவாராய்ச்சியியலைத் தனியே பிரித்து உணர வேண்டியது அவசியம்.

சாதாரண அறிவும் விஞ்ஞான அறிவும் :

அறிவாராய்ச்சியியல் போன்றவைகளை விஞ்ஞான அறிவியல் வகையான ஆய்வு வரிசையில் அடக்குதற்குச் சிலர் உடன்படார். முழுமை,

பொதுமை, திருத்தம், ஒழுங்குபாடு, அளவுபடுத்துதல் ஆகிய இலக்கணங்களால் விஞ்ஞான அறிவானது சாதாரண அறிவினின்றும் வேறுபடுகிறது. இத்தகைய ஐவகை இலக்கணங்களுக்கும் உட்பட்ட விஞ்ஞான அறிவை அறிவாராய்ச்சியியலும் தருகிறது. ஆகையால் அறிவாராய்ச்சித்துறையும் விஞ்ஞானத்துறையைச் சார்ந்ததே. மேலும் எல்லாவகை விஞ்ஞானங்களுக்கும் மூலமாகிய அறிவை நாடி பிடித்துப் பார்த்து, அறிவு சரியானதா பிழையுடையதா என்று பார்க்கும் ஆய்வு முறையே அறிவாராய்ச்சியியல் ஆகையால் அத்துறை மிகமிக அடிப்படையானது என்பதை உணர்தல் வேண்டும்.

இருவகை விஞ்ஞானங்கள் :

விஞ்ஞானங்களும் இருப்புநிலை விஞ்ஞானம், உயர்நிலை விஞ்ஞானம் என இருவகைப்படும் அவற்றுள் அறிவாராய்ச்சியியல் உயர்நிலை விஞ்ஞான வரிசையைச் சாரும். மனோத்தத்துவ இயல் அல்லது உள்ளத்தியல் போன்றவை இருப்புநிலை விஞ்ஞான வகையைச் சாரும். உயர்நிலை விஞ்ஞானங்கள் என்று சொல்லப்பெறுகிற அறிவாராய்ச்சியியல், அறவியல், அழகியல், அளவையியல் போன்றவைகள் செயல்முறைகளையும் எடுத்துக் காட்டி ஒருவனை அத்துறையில் ஈடுபட்டுச் சிறப்படைவதற்குரிய வழிவகைகளைச் செய்வதால் 'கலைகள்' எனவும் கூறப்பெறும்.

முடிப்புரை :

மேலே குறிப்பிடப் பெற்ற வாற்ருல் அறிவைப் பற்றிய கருத்துக்கள் எவ்வாறு முறையே வளர்க்கப் பெற்றன என்பதை அறியலாம். இனி. அறிவாராய்ச்சியானது சிந்தனையை மதிப்பீடு செய்யும் அளவையியலோடும் (Logic), உள்பொருளை மதிப்பீடு செய்யும் அடிப்படைத் தத்துவ இயலோடும் (Metaphysics) கொள்ளும் ஒற்றுமை வேற்றுமைகளையும் முறையே அறிந்தபின், காட்டலாகாப் பொருளாகிய அறிவு மக்களிடம் அமையும் முறை; அது முதிர்ச்சி அடையும் நிலை, அவ்வறிவின் நிலைகளைத் தமிழர்கள் சுட்டிக் காட்டியிருக்கும் முறை ஆகியவைகளை முறையுறச் சிந்தித்தால் "மெய்ப் பொருள் காண்பது அறிவு" என்ற தலைப்பானது நிறைவை எய்தும் எனக் கொள்ளலாம்.

> பரிவும் இடுக்கணும் தவிர்த்துப் பரந்த மனப்பான்மையுடன் சூழ்நிலைகளை ஆராய்ந்து தெளிவான முடிவெடுக்க வேண்டும். அப்படி எடுக்கும் முடிவுகளை உறுதியுடன் செயற்படுத்தவும் வேண்டும்.
>
> —தவத்திரு. குன்றக்குடி அடிகளார்.




## மதுராந்தகம் கோதண்டராமசுவாமி கோயில்

திரு. கே. எஸ். நரசிம்மன், பி.ஏ., பி.எல்., ஐ.ஏ.எஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

தொண்டை நாட்டிலுள்ள சிறந்த வைணவத் தலங்களுள் ஒன்ருகத் திகழ்வது. மதுராந்தகம் கோதண்டராமசுவாமி கோயில். இது சென்னைக்குத் தெற்கே 50 கல் தொலைவில், செங்கற்பட்டுக்கு அருகே உள்ளது. இத்தலம் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற தலங்களுள் ஒன்றன்ருயினும், பெரியோர்களால் இத்தலம் மிகவும் முக்கியமானதொரு வைணவத் தலமாகப் போற்றப் பெற்று வருகின்றது. உடையவர், எம்பெருமானர், பாஷ்யகாரர் என்றெல்லாம் சிறப்பித்துப் போற்றப்பெற்றுவரும் இராமாநுசருக்கு, அவர்தம் ஆசிரியர்களுள் ஒருவராகிய பெரியநம்பிகள் என்பவர், தாபம் புண்டரம் நாமம் மந்திரம் வாகம் என்னும் பஞ்ச சம்ஸ்காரங்கள் செய்தருளியதலம் இதுவேயாகும். இதற்கு வகுளாரண்யம் அல்லது மகிழமரக்காடு என்பது பழைய பெயர்.

முதலாம் இராசராச சோழனின் (கி.பி. 985-1014) சிறிய தந்தையும், பாண்டியர்களை வென்று மதுரையை அழித்து, மதுராந்தகன் என்னும் சிறப்புப்பெயர் பெற்றவனும் ஆகிய உத்தமசோழன் என்னும் மதுராந்தக சோழன் (கி.பி. 970-985), நான்கு வேதங்களையும் கற்றுத் தேர்ந்த அந்தணர்களுக்கு இறையிலி நிலமாக, மதுராந்தகசோழச் சதுர்வேதி மங்கலம் என்னும் பெயரால், இவ்வூரைத் தானமாக வழங்கினன். மதுராந்தகசோழச் சதுர்வேதிமங்கலம் என்பதே, இந்நாளில் மதுராந்தகம் என மருவி வழங்கிவருகின்றது. எனவே இவ்வூரும் கோயிலும் மிகப் பழமையாகவே இருந்து வந்திருக்கின்றன என்பது தெரிகின்றது. இங்குள்ள சுவாமிக்கு கோதண்டராமர் என்றும், தாயாருக்குச் சனகவல்லித் தாயார் என்றும் பெயர்.

இங்கே கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள கோதண்டராமர், பக்தர்களால் ‘ஏரிகாத்த இராமர்’ எனவும் போற்றப்பெற்று வருகின்ருர். இங்குள்ள ஏரி சுமார் 3000 ஏக்கர் நிலங்களுக்குப் பாய்ச்சல் வசதியளிக்கும் மிகப் பெரிய ஏரியாகும். பெருமழை பொழிந்து வெள்ளம் பெருக்கெடுக்கும்போது, சில சமயங்களில் இதன் கரைகள் உடைந்து, பல ஊர்களுக்குச் சேதம் விளைவிப்பது உண்டு. இங்ஙனம் ஒவ்வொரு ஆண்டும் வெள்ளப் பெருக்கால் மதுராந்தகப் பேர் ஏரியின் கரைகள்

உடைந்து கொண்டிருந்தன. கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக் காலத்தில், கி.பி. 1795 முதல் 1798 வரை லியோனுர்டு பிளேசு (Leonard Place) என்னும் ஆங்கிலேயர், செங்கற்பட்டு மாவட்ட ஆட்சித்தலைவராக விளங்கியிருந்தார். அவர் காலத்தில் பெருமழை பெய்து வெள்ளம் பெருக்கெடுத்து, ஏரியின் கரைகள் உடைந்துவிடுமோ என்ற அச்சம் ஏற்பட்டிருந்தது. வெள்ளத்தால் சேதம் ஏதும் ஏற்படாமலும், பொதுமக்களுக்குத் தீங்கு சிறிதும் நிகழாமலும் இருக்க வேண்டுமே என்று, லியோனுர்டு பிளேசு மிகவும் கவலை கொண்டார். ஊர்ப்பொதுமக்கள் வேண்டுதல் செய்து கொண்டபடி, ஏரியின் கரைகள் உடைந்து போகாதபடி கோதண்டராமர் அருள்புரிந்தால், தாம் கோதண்டராமசுவாமி கோயிலுக்குத் திருப்பணி செய்து, சனகவல்லித் தாயாருக்குத் தனிச் சந்நிதி ஒன்றும் கட்டித் தருவதாக, லியோனுர்டு பிளேசு பொதுமக்களுக்கு வாக்குறுதி அளித்தார். அதன்படி வெள்ளத்தால் ஏரிக்கரைகள் உடையாமல் இருந்ததுடன், இராமபிரான் தனது கோதண்டம் என்னும் வில்லை ஏந்திக் கொண்டு, தம்பியாகிய இலக்குவனுடன் ஏரிக்கரையைக் காத்து நிற்பது போல, ஓர் அருட்காட்சியும், அவ் ஆங்கிலேயருக்குக் கிடைத்தது. அதனுல் பெரிதும் மகிழ்ந்த அம்மாவட்ட ஆட்சித்தலைவர், தாம் முன்பு வாக்களித்தபடியே, கோதண்டராமர் கோயிலுக்குத் திருப்பணி செய்ததுடன், சனகவல்லித்தாயாருக்கு ஒரு தனிச் சந்நிதியும் அமைத்துக் கொடுத்து மகிழ்ந்தார். அச்சந்நிதியில் இப்போதும் "இந்தத் தர்மம் கும்பினி கலெக்டர் கர்னல் லியோனுர்டு பிளேசு துரை அவர்களது" எனச் செதுக்கப் பெற்றுள்ள ஒரு கல்வெட்டு இருத்தலைக் காணலாம். இந்நிகழ்ச்சியால் கோதண்டராமர் "ஏரிகாத்த இராமர்" எனவும், பக்தர்களால் போற்றப் பெற்றுத் திகழ்ந்து வருகின்றூர்.

அண்மையில் 1973-ஆம் ஆண்டில் இக்கோயிலுக்கு மீண்டும் திருப்பணி நிகழ்ந்தபோது, இதன்கண் உள்ள சுரங்க அறையிலிருந்து சங்கு, சக்கரம், நவநீதகிருஷ்ணர், மற்றும் பூசைப் பாத்திரங்கள் முதலியன, கண்டெடுக்கப் பட்டன. அவைகள் இராமாநுசரின் குருவாகிய பெரியநம்பிகள் என்பவரால் பூசிக்கப்பெற்றவனவாக இருத்தல்கூடும் என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

இங்கே திருவெண்காட்டீசுவரர் என்னும் பெரிய சிவபிரான் கோயில் ஒன்றும் சிறப்புற அமைந்துள்ளது. இதுவும் மிகப் பழமையான, சோழர் காலத்துப் பாணியில் அமைந்த கோயிலேயாகும். கோதண்டராமசுவாமி கோயில், அகோபிலமடத்தின் அருளாட்சியில் உள்ளது.

இராமபிரான் இலங்கையில் இராவணவதம் செய்து புஷ்பக விமானத்தில் அயோத்திக்கு திரும்பும்போது, இங்கிருந்து விபாண்டக முனிவரின் ஆசிரமத்திற்கு எழுந்தருளினர். விமானத்தினின்று இறங்கும் சீதைக்குக் கைகொடுத்து அணைத்து உதவி செய்யும் நிலையில், இங்கு இராமபிரானின் திருவுருவம் அமைந்துள்ளது. இதனை "ஹஸ்த வாலம்பன தரிசனம்" என்பர். இது வேறு எங்கும் காண முடியாத சிறப்புக் காட்சியாகும். இத்தலத்தையும் கோயிலையும் பக்தர்கள் அனைவரும் சென்று கண்டு வழிபட்டு மகிழலாம்.

இக்கோயிலில், அண்மையில் மிகப் பெருஞ் செலவில், மிகக் குறுகிய காலத்திற்குள், சிறந்த அழகிய தேர் ஒன்று புதிதாகச் செய்யப்பெற்று, அதன் வெள்ளோட்டமும் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் தரிசித்து மகிழும்படி, சிறப்புற நடைபெற்றமை, இங்குக் குறிப்பிடத் தக்கது.




## திருஞானசம்பந்தர்

மருதமலையான்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க, சோழவள நாட்டில் சீர்காழிப்பதியில் அந்தணர் குலத்தில், கவுணிய கோத்திரத்தில் சிவபாத இருதயருக்கும், பகவதி அம்மையாருக்கும் தோன்றியவர் 'சிவம் பெருக்கும் பிள்ளையாராம்' திருஞான சம்பந்தர். மூவாண்டில், தோணி புரத் தீர்த்தக் கரையில், அப்பன் அருளால் எண்ணரிய சிவஞானத் தின்னமுதம் குழைத்தருளி அம்மையால் ஞானப்பால் ஊட்டுவிக்கப் பெற்று 'தோடுடைய செவியன் என்னும் திருப்பதிகம் பாடியருளினர். இவர் காலம் கி.பி. ஏழாம் நூற்றுண்டின் இடைப்பகுதியாகும்.

திருக்கோலக்காவில், "மடையில் வாளைகள் பாய" எனும் திருப்பதிகம் பாடி 'அஞ்செழுத்தும் எழுதிய நற்செம்பொற்றுளம்" பெற்றூர். பின் பலபதிகளுக்கு எழுந்தருளிப் பதிகங்கள்பாடிப் பணிந்து சீர்காழிக்கு மீண்டு, திருநீலகண்டப் பெரும் பாணர்க்குத் தாம் பாடும் பதிகங்களை யாழில் இசைக்க அருள் புரிந்தார். திருநெல்வாயில் அரத்துறையில் இறைவன் அருளால் முத்துச் சிவிகை, முத்துக் குடை, முத்துச் சின்னம் முதலியன பெற்று, திருப்பாச்சிலாச்சிராமத்தில், 'துணிவளர் திங்கள்' என்ற பதிகம் பாடி கொல்லிமழவனுடைய மகளின் முயலகன் நோயைத் தீர்த்தருளினர். கொடி மாடச் செங்குன்றூரில் 'அவ்வினைக் இவ்வினை' என்ற பதிகம் பாடி, மக்களை வாட்டிய நளிர்சுரம் போக்கினர். பட்டீச் சரத்தில் முத்துப்பந்தர் பெற்றூர், திருவாவடுதுறையில் 'இடரினும் தளரினும்' பதிகம் பாடி சிவபாத இருதயர் வேள்வி செய்ய ஆயிரம் பொன் பொருந்திய முடிப்பைப் பெற்றுத் தந்தார். தருமபுரத்தில் "மாதர் மடப் பிடியும்" என்ற யாழ்முரிப் பதிகம் பாடினர்.

திருச்சாத்த மங்கையில் திருநீலநக்கராலும், செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டாலும் உபசரிக்கப் பெற்றுத் திருமருகலை அடைந்து "சடையாய் எனுமால்" என்ற பதிகம் பாடி, அரவு தீண்டி இறந்த வணிகன் மகனை உயிர்ப்பித்து அவன் காதலிக்கும் அவனுக்கும் மணம் முடித்து வைத்தார். அப்பர் பெருமானைக் கண்டு வணங்கி அவருடன் திருவாரூர் முதலிய தலங்களை வழிபட்டு, திருக்கடவூரில் குங்கிலியக் கலயநாயனரின் வழிபாட்டை ஏற்று, திருவீழிமிழலையை அடைந்து, அங்கு சீர்காழித் தோணியப்பர் திருவோலக்கக் காட்சியைக் கண்டு மகிழ்ந்து, மழையின்மையால் வருந்திய மக்களுக்கு, இறைவனைத் தொழுது, படிக்காசு பெற்று, அது வாசியுடையதாக, "வாசிதீரவே காசு நல்குவீர்" என்ற பதிகம்பாடி நற்காசு பெற்று அடியார்க்கு அமுது செய்வித் தருளி, பின் அப்பர் பெருமானுடன் திருமறைக்காடு சென்று

வேதங்களால் அடைபட்டிருந்த திருக்கதவங்களைத் திருநாவுக்கரசர் திறக்கப் பாட 'சதுரம் மறை' என்ற பதிகம் பாடி சம்பந்தர் மூடவும் செய்தார். அதன் பின் அக்கதவுகளை வழக்கம் போல் திறக்கவும் மூடவும் முடிந்தது.

பாண்டிமாதேவியாம் மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகியோரது வேண்டுகோளுக் கிணங்கிப் பாண்டிநாடு செல்ல, அப்போது நாளும் கோளும் நலமாக இல்லாததால், 'வேயுறு தோளிபங்கன்' என்ற 'கோளறு பதிகம் பாடி அப்பரிடம் விடைபெற்று மதுரையம்பதியை அடைந்து ஆலவாய் அண்ணலை வணங்கித் திருமடம் ஒன்றில் எழுந்தருளினர்.

அங்குச் சமணர்கள் சூழ்ச்சியினல் அவர் தங்கியிருந்த திருமடத்திற்கு தீ இடப்பெற்றது "செய்யனே திரு ஆலவாய்" என்ற பதிகம் பாட, தீத் தணிந்து பாண்டிய மன்னனைப் பற்றி, வெப்பு நோயாக மாறி வருத்தத் தொடங்கியது. சமணர்களால் தீர்க்க முடியாத வெப்பு நோயை 'மந்திர மாவது நீறு" என்ற பதிகம்பாடித் திருநீறு பூசி நீக்கியருளி சமண சமயம் சார்ந்திருந்த பாண்டிய மன்னனை மீண்டும் சைவனுக்கி, பின் சமணர்களை, அனல், புனல் வாதங்களில் வென்று, பாண்டியனின் கூனையும் நிமிர்த்தியருளினர்.

பாண்டிப்பதிகள் பலவும் பணிந்து, சோழநாடு போந்து திருக்கொள்ளம்பூதூரில் "கொட்டமே கமழும்" என்ற பதிகம் பாடி ஆற்று வெள்ளத்தில் ஓடத்தைச் செலுத்தி ஆற்றைக் கடந்து, போதி மங்கையில் புத்தர்களை வென்று, திருப்பூந்துருத்தியில் மீண்டும் அப்பரைச் சந்தித்துப்பிறகு பல தலங்களையும் தரிசித்துத் தொண்டை நன்னுடைந்து திருவோத்தூரில் ஆண்பனைகளை பெண்பனைகளாக்கி, காளத்தி முதலிய தலங்களை வழிபட்டுத் திருவொற்றியூரடைந்து, வழிபட்டு, திருமயிலாப்பூருக்கு எழுந்தருளி, அரவு கடித்திறந்த சிவநேசச் செட்டியாரின் மகள் பூம்பாவையின் சாம்பர் அடைக்கப்பட்டிருந்த திருக்குடத்தை இறைவன் திருமுன் வைத்து, 'மட்டிட்ட புன்னை' என்ற பதிகம் பாடி எலும்பைப் பெண்ணுக்கி, அவளை மணந்து கொள்ளும்படி கூறிய சிவநேசச் செட்டியாருக்குத் தக்க காரணம் கூறி மறுத்து, மயிலையிலிருந்து புறப்பட்டுச் சீர்காழியை அடைந்து, பெரியோர்களின் வேண்டுகோளுக் கிணங்க, நம்பாண்டார் நம்பிகளின் திருமகளைக் கைப்பிடித்துத் திருமணக் கோலத்துடன் திருநல்லூர்ப் பெருமணம் திருக்கோயிலுக்கு எழுந்தருளி, அங்கு 'காதலாகிக் கசிந்து' என்ற பஞ்சாக்கரப்பதிகம் பாடி அடியார்களும் உறவினர்களும் புடைசூழ வைகாசி மூலநன்னுளில் அந்தமில் இன்பத்து அழிவில் வீடாகிய சிவசோதியுள் கலந்தருளினர்.

திருஞானசம்பந்தர் 383 பதிகங்கள் பாடியருளியுள்ளார். இவர் பாடல் பெற்ற திருத்தலங்கள் 219. திருப்பாடல் தொகை. 4147. பன்னிரு திருமுறைகளில் முதல் மூன்று திருமுறைகளாக வகுத்து வைத்துப் போற்றப் பெறுகின்றன. தாம் பாடியருளிய திருப்பதிகங்கள். ஒவ்வொன்றிலும் திருக்கடைக் காப்புச் செய்யுளில், இன்தமிழ், நற்றமிழ் செந்தமிழ், ஒண்தமிழ், அருந்தமிழ் என்று தமிழுக்குப் பல அடைமொழிகள் கொடுத்துப்பாடியருளியுள்ளார். அவர் பாடியருளிய தேவாரப் பனுவல்களை நாம் எல்லோரும் ஓதி இறைவன் திருவருள் பெற்று உய்வோமாக.

---

பிரமாதீச ஆண்டு வைகாசித் திங்கள் 7-ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமையன்று (20-5-73) திருஞானசம்பந்தர் திருநட்சத்திரமாகிய மூல நன்னுள் கொண்டாடப் பேற்றது.




## முருகனின் திருவுருவங்கள்

[புலவர் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,]

முன்னுரை :

இறைவன் ஒரு நாமமும், ஒருருவமும் இல்லாதவன். ஆயினும் அடியார்களின் பொருட்டு, அவன் பல வடிவமும் பல பெயரும் கொள்கின்ருன்.

"ஒருநாமம் ஒருருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமே"

என்பது திருவாசகம். அம்முறையில் தனக்கென ஒருருவம் இல்லாத இறைவன், அடியார்களுக்கு அருள் செய்தல் குறித்து, வெவ்வேறு திருவுருவங்களை மேற் கொள்ளுகின்ருன். 'நானுவித உருவாய் நமை யாள்வான்' 'பல பல வேடம் ஆகும் பரன்' என்பன தேவாரம். இறைவன் தன்னியல்பில் இத்தகையவன், 'இந்நிறத்தன் இவ்வண்ணத் தன் எழுதிக் காட்டொணுதவன்' என்பது உண்மையே யாயினும், அவ் இறைவனை நம் பழம் பெரும் சான்ருேர்கள் வெவ்வேறு வடிவங்களில், பல்வேறு நிலைகளில் கண்டு அறிந்து பணிந்து போற்றியுள்ளனர். சிவபிரானுக்கு உரிய அருட்கோலங்கள் 25 என்றும், 64 என்றும் நூல்கள் நுவலும். அவ்வாறே முருகனுக்கும், பலவகையான அழகிய அருள் வடிவங்கள் உண்டு என்று பெரியோர்கள் கூறுவர். குமாரதந்திரம், சீதத்துவநிதி முதலிய சிற்பக்கலை நூல்களில் முருகனுக்குரிய திருவுருவங் கள் பற்றி விளக்கப் பெற்றுள்ளன.

(1) ஞானசத்திதரன் :

சத்தி என்பது வேலுக்கு ஒரு பெயர். ஞானமே முருகனுக்கு வேலாக அமைந்திருக்கின்றது. ஆதலின் அதனை ஞானசத்தி எனவும் வழங்குவர். ஞானசத்தியாகிய வேலை, முருகன் தனது வலக்கையில் ஏந்தியிருக்கின்ருன். இடக்கையைத் தனது தொடையில் வைத்திருக் கின்ருன். இங்ஙனம் இரண்டு கைகள் உடையவனுய், வேலேந்தி நிற்கும் கோலத்துடன் விளங்கும் முருகனை ஞானசத்திதரன் என்பர். திருத்தணிகையிலுள்ள முருகன், ஞானசத்திதரன் என்னும் திருவுருவம் உடையவனே என்பது, நாம் சிந்தித்து மகிழ்தற்குரியது.

(2) கந்தசுவாமி :

முருகனுக்கு உரிய சிறப்புப் பெயர்களில் கந்தன் என்பது ஒன்று. கந்தன் என்னும் சொல்லுக்குத் திரண்டவன் என்பது பொருள். "சேயவன் வடிவம் ஆறும் திரட்டி நீ ஒன்ருய்ச் செய்தாய், ஆயதனுலே

கந்தனும் நாமம் பெற்ருன்" என்பது கந்தபுராணம். கடவுளர் பலரின் ஆற்றலும் ஒருங்கே திரண்டவன் எனவும் கொள்ளலாம். அடியார்களுக்குப் பற்றுக்கோடானவன், கந்தன் எனக் கொள்ளுதலும் பொருந்தும். கந்து என்பது நடுதறி அல்லது தண்டாயுதத்தையும் குறிக்கும். ஆதலின், கந்த சுவாமி என்பது, பழநி ஆண்டவரின் திருவுருவத்தைக் குறிக்கும் சிற்ப நூற்பெயர் எனலாம்.

இத்திருவுருவம் ஒரு முகமும், இரு கைகளும் கொண்டிருக்கும். வலக் கரத்தில் தண்டாயுதத்தை ஏந்தி, இடக்கையை இடுப்பில் ஊன்றி, துறவுக் கோலத்தில், தலை முண்டிதமாய், உருத்திராக்க மணிவடம் தாங்கிக் கோவணம் அணிந்த நிலையில், நின்ற கோலத்துடன் இருக்கும்.

(3) தேவ சேனுபதி :

முருகன் 6 திருமுகங்களும், 12 திருக்கைகளும் கொண்டு, தெய்வ யானையம்மையாருடன் எழுந்தருளியிருக்கும் நிலை. இதன்கண், முருகன் தனது இடப்பக்கத்தில் அமைந்திருக்கும் தெய்வயானையம்மையை ஒருகை தழுவி இருக்க, மற்ருெரு கை அடியார்களுக்கு 'அஞ்சேல்' என்று அபயம் அளிக்கும் நிலையில் விளங்குவன். ஏனைய பத்துக் கைகளும் முறையே கேடயம் அரிவாள் சூலம் வச்சிரம் வேல் வாள் வில் தண்டு புள்ளம் அம்பு ஆகிய பத்துப் படைக்கலன்களைத் தாங்கி இருக்கும். இங்ஙனம் அமைக்கப்பெறும் சிற்பம், தேவசேனுபதி எனப்பெறும். 'தெய்வயானையின் கணவர்' என்பது இத்தொடருக்குப் பொருள் ஆகும்.

(4) சுப்பிரமணியம் :

முருகன் தனது இடப்பக்கத்துக் கையினை, இடுப்பில் அமைத்துக் கொண்டு, வலப்பக்கத்தில் ஒருகையை அஞ்சல் அளிக்கும் அபய நிலையில் ஏந்திக் கொண்டு, தன்னை வணங்கும் அடியவர்களுக்கு அருள் பொழிகின்ற கண்களுடன் விளங்குகின்ருன். இந்நிலையிலேயே அவனை சிற்பநூல்கள், சுப்பிரமணியன் எனக் கூறித் துதித்துப் போற்றுகின்றன.

சுப்பிரமணியன் என்னும் சொல்லுக்குப் பிராமணர்க்கும் வேதத்திற்கும் முதன்மை மிக்க தேவன் (சு+ப்ரமணியன்); இன்பத்தினையே இயல்பாக உடைய சிவபரம்பொருளின் வேறன்றி விளங்குபவன் (சு+பிரமம்+ந்யம், ண்யம்) எனப் பாம்பன் சுவாமிகள் பொருள் கூறுவர்.

(5) களிற்றூர்திப் பெருமான் :

முருகனுக்கு மயில் ஒன்றே வாகனம் என அன்பர்கள் பலரும் கருதுவர். ஆயினும், முருகனுக்கு வேறு வாகனங்களும் உண்டு. முருகன் யானையையும் ஓர் ஊர்தியாகக் கொண்டருளுவன். யானையை ஊர்தியாகக் கொள்ளும் நிலையில், முருகனைக் களிற்றூர்திப் பெருமான் (கஜவாகனர்) எனச் சிற்ப நூல்கள் குறிப்பிடும். இத்திருவுருவத்தினை ஆசிரியர் நக்கீரரும் தமது திருமுருகாற்றுப்படையில் திருச்சீரலைவாய் பற்றிய பகுதியில், அதன் தொடக்கத்தில் விரித்துரைத்து விளக்கியிருத்தல் காணலாம்.

ஆண் யானையின் மீது, ஒரு திருமுகமும், நான்கும் கைகளும், இடப் பக்கக் கைகள் இரண்டில் இரண்டு உரு எழுதியகோழிக் கொடிகளும், வலப்பக்கக்கைகள் இரண்டில் வேலும் வாளும் கொண்டு விளங்குபவன் களிற்றூர்திப் பெருமான் ஆவன்.

(6) சரவண பவன் :

சிவபிரானிடம் சென்று சூரபதுமனால் தாங்கள் படும் துயரங்களைக் கூறித் தேவர்கள் முறையிட, அப்பெருமான் தனது 6 திருமுகங் களினின்று ஆறு தீப்பொறிகளை வெளிப்படுத்தினான். விசும்பில் பரவிய அப்பொறிகளை வருவித்து இறைவன் வாயு தேவனிடம் சேர்ப்பித்தான். அவன் அவற்றைத் தாங்க முடியாமல் அக்கினித் தேவனிடத்தில் ஒப்படைத்தான். அக்கினியும் அதனைக் கங்கையில் விடுத்தான். அதுவும் அவற்றைத் தாங்கும் ஆற்றலின்றி நாணற்புல் நிறைந்த சரவணப் பொய்கையில் விடுத்தது. பின்னர் அப்பொறிகள் ஆறும், ஆறு குழந்தைகளாகி அப்பொய்கையில் இருந்த தாமரை மலர்களில் வீற்றிருப்பன ஆயின என்பது, முருகனைக் குறித்த கந்தபுராண வரலாறு. சரவணப் பொய்கையில் தோன்றியதனாலேயே, முருகப்பெருமானுக்குச் சரவணபவன் என்பது பெயராயிற்று.

மறைகளின் முடிவால் வாக்கால்மனத்தினால் அளக்கொணாமல்
நிறைவுடன் யாண்டும் ஆகி நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி அருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதில் வீற்றிருந் தருளி னானே

—கந்தபுராணம்.

ஆறு திருமுகங்களுடன், ஒரு கை வரங்கள் தரும் நிலையிலும், மற்றொரு கை அஞ்சல் அளிக்கும் நிலையிலும் விளங்க, ஏனைய பத்து கைகளிலும் முறையே வேல்-கேடயம்-கண்டாமணி-தாமரைமலர்-சேவல் தண்டு-உளி-அம்பு-வாள் என்னும் பத்துக் கருவிகளைத் தாங்கிக் கொண்டு, தாமரை மலரில் எழுந்தருளி நிற்கும் நிலையில் அமைந்துள்ள முருகனைச் 'சரவணபவன்' எனச் சிற்ப நூல்கள் குறிக்கும்.

(7) கார்த்திகேயன் :

சரவணப் பொய்கையில் ஆறு குழந்தைகளாக வடிவம் கொண்டிருந்த முருகனுக்குக் கார்த்திகைப் பெண்கள் அறுவரும் திருமுலைப்பால் அளித்தனர் என்பது வரலாறு. அதனாலேயே முருகனுக்குக் கார்த்திகே யன் என்னும் பெயர் ஏற்பட்டது. தமிழ்நாட்டு முருகனை, வட இந்திய மக்கள் கார்த்திகேயன் என்னும் பெயரிலேயே சிறப்புற அறிந்து, வழி பட்டு மகிழ்ந்து வருகின்றனர்.

கார்த்திகேயன் என்னும் நிலையில் முருகன் ஆறு திருமுகங்களும், ஆறு திருக்கைகளும் மட்டுமே கொண்டு விளங்குவன். வலப்பக்கத்தி லுள்ள மூன்று கைகளும் முறையே வேலும் வாளும் ஏந்தி அஞ்சல் அளிக்கும் நிலையில் இருக்கும்; இடப்பக்கத்திலுள்ள மூன்று கைகளும் முறையே குலிசம் கேடயம் என்னவற்றை ஏந்திக் கொண்டு வரங்கள் தரும் நிலையில் அழகுற விளங்கும்.

(8) குமாரன் :

தனது நெற்றிக் கண்ணினால் 'மாரனை' எரித்தருளிய சிவபெருமான், அந்நெற்றிக்கண்ணினின்றே குமாரன் ஆகிய முருகனை அளித்தருளி னான். மாரனை எரித்தது, நிக்கிரகம்; குமாரனை அளித்தது அநுக்கிரகம். குமாரன் என்னும் சொல்லே, குமரன் எனவும் வழங்கப்படும். கு-குற்சி தம், அருவருப்பு மலம். மாரன்-மரிக்கச் செய்பவன். உயிர்களின் மலப்பிணிப்பை அழித்தொழிக்க வல்லவன் எவனோ, அவனே குமாரன் எனப்படுவான்.

குமாரன் என்னும் நிலையில், முருகன் ஒரு திருமுகம், நான்கு திருக் கைகளும் கொண்டிருப்பான். அவனது வலப்பக்கத்தில் வள்ளியம்மை விளங்குவள். வலப்பக்கத்துத் திருக்கைகளில் வேலும் வாளும் இருக் கும். இடப்பக்கத்துத் திருக்கைகளில் கோழிக் கொடியும், கேடயமும் ஏந்தி யிருப்பான்.

(9) ஆறுமுகவர் ;

இறைவன் தன் அடியார்களுக்கு அஞ்சும்முகம் (இடுக்கண்) தோன் றும் போதெல்லாம், ஆறுமுகம் கொண்டு வந்து தோன்றி அருள் புரிகின்ருன்.

"அஞ்சுமுகம் தோன்ருமல் ஆறுமுகம் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்பது எந்நாளோ"

—தாயுமானவர்.

பிற தெய்வங்களுக்கு இல்லாதவகையில், முருகன் ஆறு திருமுகங்கள் உடையவனுக விளங்குகின்ருன். அஃது அவனது தனிப்பெரும் சிறப்பியல்பினை உணர்த்துகின்றது. ஞானம் ஐசுவரியம் திரு வீரியம் வைராக்கியம் புகழ் என்னும் இறைமைக் குணங்கள் ஆறும், முருகனுக்கு ஆறு முகங்களாகின என்பர் சான்ருேர். ஆதலின் ஆறுமுகன், ஷண்முகன் என்பன அவனுக்கு பெயர்களாயின. முருகன் வேல்-அம்பு-வாள்-திகிரி-பாசம் (கயிறு)-அபயம் என்பவற்றைத் தன் ஆறு வலக்கை களிலும், வச்சிரம்-வில்-கேடயம்-கோழிக்கொடி-அங்குசம்-வரதம் என்ப வற்றைத் தன் ஆறு இடக்கைகளிலும் உடையவனுய், வலத்தும் இடத் தும் முறையே வள்ளி தெய்வயானையர் விளங்க, மயில்மீது இவர்ந்தோ உடனிருக்கவோ திகழும் நிலையில், ஆறுமுகவன் எனப் போற்றப்படு வான். திருச்செந்தூரில் முருகன் ஆறுமுகனுகக் காட்சி தருகின்ருன் திருமுருகாற்றுப்படை இந்நிலையினைச் சிறந்தெடுத்துப் போற்றித் துதித்து இருத்தல் காணலாம்.

(10) தாரகாந்தகர் :

சூரபதுமன் சிங்கமுகன் என்னும் அசுரர்கள் மூவரையும் அழித்தருளி ஞன் முருகன் என்பது வரலாறு. தாரகன் என்பவன், சூரனின் இளைய தம்பி. மாயைகள் செய்து, பகைவரை மயக்கி வருத்தி வெல்லுதலில், தாரகன் மிகவும் வல்லவன். அவன் கிரவுஞ்சம் என்னும் தனது மலையின் குகைக்குள் புகுந்து வீரவாகு தேவர் முதலினேரை மயக்கமுறச் செய் தான். அந்நிலையில் முருகன் தனது வேலை விடுத்துத் தாரகாசுரனை அழித்தருளினன். ஆதலின் தாரகாந்தகர், தாரகாரி, 'குருகுப்பெயர்க் குன்றம் கொன்ருேன்' என முருகன் பல பெயர்கள் பெற்ருன்.

ஆறு திருமுகங்களுடன், தனது பன்னிரண்டு திருக்கைகளிலும் வலப் பக்கத்தில் வரதம்-கொடி-கேடயம்-அங்குசம்-பாசம்-குலிசம் ஏந்திக் கொண்டு, இடப்பக்கத்தில் அபயம்-வாள்-சூலம்-சக்கரம்-முசலம்-வேல் என்பவற்றுடன் முருகன் காட்சிதரும் நிலையே தாரகாந்தகர் என்னும் திருவுருவமாகும்.

(11) சேனபதி :

முருகன் வீரர்களுக்கெல்லாம் பெருவீரனுக விளங்குபவன். வீரம் பெற விரும்புவோர் அனைவரும் முருகனை வழிபடு கடவுளாகக் கொண்டு போற்றுவர். 'வீரர்களுக்குள் யான் கந்தனுகத் திகழ்கின்றேன்' எனக்

கீதையில் கண்ணபிரான் கூறியதாகப் பெரியோர் கூறுவர். மேலும் சூரபதுமன் முதலிய அசுரர்கள் வெல்லுதற் பொருட்டுப் புறப்பட்ட தேவர்களின் படைகளுக்கு முருகனே தலைவனாக விளங்கினான். சேனைக்குப் பதியாகத் திகழ்ந்ததனால், 'சேனாபதி' 'சேனானி' என்னும் பெயர்கள் முருகனுக்கு அமைந்தன. தேவ சேனாபதி, தேவர்களின் படைக்குத் தலைவன் எனவும், முருகனைப் பெரியோர்கள் வழங்குவர்.

ஆறு திருமுகங்களுடன், அபயம் முசலம் வாள் சூலம் அம்பு அங்குசம் என்பனவற்றை ஆறு வலக்கைகளிலும், வச்சிரம் வில் தாமரை மலர் பிரம்பு தண்டாயுதம் என்பவனவற்றை ஆறு இடக்கைகளிலும் தாங்கிக் கொண்டு, அடியார்களின் துன்பங்களை நீக்கும் முருகன், சேனாபதி எனப்படுவான்.

(12) பிரம்மசாத்தன் :

சிவபெருமானை வணங்கப் பிரமன் ஒருசமயம் திருக்கயிலைக்குச் சென்றான். அங்கே வழியில் வீற்றிருந்த முருகனை மதியாது, எளிதாக எண்ணிச் செருக்குடன் அவரைக் கடந்து சென்றான். அந்நிலையில் முருகன் வீரவாகு தேவரை ஏவிப் பிரமனைப் பிடித்துக் கொணருமாறு செய்து, அவனது பெயர் தொழில் முதலியவற்றை உசாவி பிரணவப் பொருள் யாது? என வினவினர். அவன் கூற அறியாது மயங்கி நிற்க, அவன் செருக்கு அடங்குமாறு தலையிற் குட்டிச் சிறையில் அடைப்பித்தார்.

பின்னர் அவனது படைப்புத் தொழிலைத் தாமே செய்ய மேற்கொண்டருளினார். இந்நிலையே பிரமசாத்தன் என்னும் திருவுருவமாகும். காஞ்சிபுரம் குமரகோட்டத்திலும், திருப்போரூர்க் கோயிலிலும் முருகன் இத்திருவுருவிலேயே எழுந்தருளி விளங்குகின்றான். பிரமசாத்தன் என்னும் தொடர், பிரமனைத் தண்டித்தவர் எனப் பொருள்படும்.

இத்திருவுருவில் முருகன், ஒரு திருமுகமும், நான்கு கைகளும் உடையவனாகத் திகழ்வான். வலக்கைகளில் அபய முத்திரையும், உருத்திராக்க செப மாலையும் இருக்கும். வரதமுத்திரையும், கமண்டலமும் இடக்கைகளில் விளங்கும்.

(13) வள்ளி கல்யாண சுந்தரர் :

முருகன் தெய்வயானையாருக்கும் கணவனாயினும், அவனை 'வள்ளி கணவன்' என்றே பெரும்பாலும் புலவர்கள் புகழ்ந்து போற்றுவர். முருகனுக்கு தெய்வயானை கிரியா சத்தி என்றும், வள்ளியம்மை இச்சா சத்தி என்றும் நூல்கள் கூறும். களவு கற்பு என்னும் திருமண முறைகள் இரண்டினுள், தெய்வயானையின் திருமணம் கற்பு நெறிக்குரியது என்றும், வள்ளியம்மையின் திருமணம் களவுநெறி தழுவியது என்றும் அறிஞர்கள் கூறுவர்.

"குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே"

என்பது திருமுருகாற்றுப்படை, உலகில் இல்வாழ்க்கை இனிது நடத்தற் பொருட்டே முருகன் வள்ளியம்மையை மணந்து கொண்டு, அவளுடன் இனிதுறப் பேசி நகையமர்ந்தருள்கின்றான் என ஞான நூல்கள் கூறும். இங்ஙனம் வள்ளியம்மையை மணந்து கொண்ட இனிய எழில் நிலையிலுள்ள முருகனே, வள்ளி கல்யாணசுந்தரர் ஆவர்.

வலக்கையில் அபய முத்திரையும், உருத்திராக்கமணிவடமும் ஏந்தி, இடக்கைகளில் ஒன்றை வரத முத்திரையிலும் மற்றொன்றை இடுப்பிலும் அமைத்துக் கொண்டு ஒரு முகமுடையவராய், திருமால் தாரை நீர் வார்த்துக் கொடுக்க, வலப்பக்கமுள்ள வள்ளியை ஏற்று, மணந்து கொள்ளும் நிலையில், இத்திருவுருவம் எழிலுற அமைந்திருக்கும்.

(14) பாலசுப்பிரமணியர் :

முருகன் என்னும் சொல்லுக்கு இளமை உடையவன், அழகு மிக்கவன் என்பது பொருள். "என்றும் இளையாய் அழகியாய்" எனப் புலவர் ஒருவர் முருகனைப் புகழ்ந்து துதித்திருத்தலைக் காணலாம். இளமையும் அழகையும் விரும்பாதவர்கள் எவரும் உலகத்தில் இலர். முருகனை அன்புடன் வழிபட்டு வந்தால், இளமை அழகு முதலிய எல்லா நலன்களையும் பெற்று இன்புற்று வாழலாம். இளமையும் அழகும் இறைமையும் மிக்க நிலையில் விளங்கும் முருகனே, பாலசுப்பிரமணியர் எனப்படுவர். இவர் ஒரு திருமுகமும் இரண்டு திருக்கைகளும் உடையவராய் இருப்பர். இவர், வலக்கையில் தாமரை மலரை ஏந்திக் கொண்டு, இடக்கையை இடுப்பில் அமைத்திருப்பர். இவரைப் பாலசுந்தரர், பாலசுவாமி என்றும் பெரியோர் குறிப்பிடுவர். இவர், தம் திருவடிகளில் இளஞ்சிறுர்க்குரிய கிண்கிணி என்னும் சதங்கையை அணிந்திருப்பார்.

(15) கிரவுஞ்ச பேதனர் :

கிரவுஞ்சம் என்பது, சூரபதுமனின் தம்பியாகிய தாரகனுக்கு உறைவிடமானதும், மாயையில் வல்லதுமாகிய ஒரு மலையாகும். முருகன் தன் தம்பியும் துணைவருமாகிய வீரவாகுதேவரை நோக்கி, நீ தாரகனின் தலைநகரமாகிய மாயாபுரிக்குச் சென்று அவனை வென்று வருக! என்று பணித்தனர். அங்ஙனமே சென்ற வீரவாகுதேவரை எதிர்த்துப் போர் செய்ய முடியாமல், தாரகன் தன் தேரைவிட்டு இறங்கி ஓடி, கிரவுஞ்ச மலையின் உட்புகுந்து ஒளிந்தான். அந்நிலையில் அவனைப் பிடிக்கத் தொடர்ந்து சென்ற வீரவாகுதேவரும், அவர் தம் துணைவர்களும், அம் மாயமலையின் குகையிற் சிக்கி, இருளில் வழி தெரியாது திகைத்து, மயக்கமுற்றனர். அஃதறிந்த முருகப்பெருமான், தமது ஞானசத்தியாகிய வேலை ஏவி, அம்மலையைப் பிளந்து வீரவாகுதேவர் முதலியோரை விடுவித்துத் தாரகாசுரனைக் கொன்றனர். கிரவுஞ்ச மலையைப் பிளந்து அழித்த முருகனின் திருவுருவமே 'கிரவுஞ்ச சேதனர்' எனப்படும். இதனைச் சங்கநூல்கள் 'குருகுபெயர்க்குன்றம் கொன்றோன்' எனச் சிறப்பித்துப் புகழும். சங்க நூல்களுள் ஒன்ருகிய குறுந்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடல், இத்திருவுருவத்தைப் பற்றியதே ஆகும் என்பர். கிரவுஞ்சம்-அன்றிற்பறவை; அதன் வடிவாகிய மாயமலை. பேதனர்-பிளந்தவர்.

கிரவுஞ்ச பேதனர் ஆறுமுகமும் எட்டுக் கைகளும் உடையவர், வலக்கைகளில் வேல் வாள் பகழி அபயம் என்பவற்றையும், இடக்கைகளில் வச்சிரம் கேடயம் வரதம் வில் என்பவற்றையும் ஏந்திக் கொண்டு, எட்டுக் கைகள் உடையவராய் ஆறுமுகங்களுடன் இருப்பர்.

(16) சிகிவாகனர் :

முருகன் மயில் வாகனத்தை ஊர்தியாகக் கொண்டவன் என்பது யாவரும் அறிந்தது. சிகி என்பது மயிலுக்குப் பெயர். அதனை வாகனமாகக் கொண்டவன் முருகன், முருகனுக்கு மயில் கொடியாகவும் இருக்கும். இதனை 'மணிமயில் உயரிய மாறுவென்றிப் பிணிமுக ஊர்தி ஒன்

செய்யோனும்' எனவரும் சங்கப் பாடல் கொண்டு உணரலாம். சுத்த மாயை ஆகிய விந்து தந்துவமே. முருகனுக்கு மயிலாக விளங்குகின்றது. 'சால விந்து எனும் தடமா மயிலாய்! தாலோ! தாலேலோ! என்பது திருப்போரூச் சந்நிதி முறை. மயில்தோகை விரித்தாடும் காட்சி ஓங்கார வடிவம் போன்றிருக்கும். முருகன் அத்தகைய மயிலின்மீது அமர்ந்து எழுந்தருளிக் காட்சிதரும் பேற்றையே, அருணகிரிநாதர் "ஓங்காரத்து உள்ளொளிக்குள்ளே முருகன் உருவம் கண்டு தூங்கார்" என அருளிச் செய்து போற்றியுள்ளார்.

இத்திருவுருவில், வலக்கைகளில் வேலும் அபயமும் தாங்கி, இடக் கைகளில் வரதமும் வச்சிரமும் உடையவராய், ஒரு திருமுகத்துடன், மயிலின் மீது முருகன் வீற்றிருப்பார். இந்தப் பதினறு திருவுருவங்களே அன்றி, அக்கினிஜாதர், சௌரபேயர், காங்கேயர், சூகர், பிரமசாரி, தேசிகர் முதலிய திருவுருவங்களும் சிற்ப நூல்களில் முருகனுக்குச் சொல்லப் பெறுகின்றன.

முடிவுரை :

இங்ஙனம் அடியார்களின் பொருட்டுப் பல திருவுருவங்களை மேற் கொண்டு, அன்பர்களுக்கெல்லாம் அருள்புரிந்து வரும் முருகப் பெருமானின் திருவடிகளைப் பலகாலும் பணிந்து பத்தி செய்து, பரவித் தொழுது, நாம் உய்ய முயலுவோமாக.




**ஓசையுள் ஓசை**

ஓசையுள் ஓசை 'அருளோசை' மற்றதனின் ஓசை தெருள் ஓசையென்று தெளி.

—கவி- எ. தேவராசன், பட்டாபிராம்.

**வினாவிடைப் பகுதி**

கொள்கை, ஐயப்பாடுகளை நீக்க வினாவிடைப் பகுதி தொடங்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

—சி. கணேசன், இருளப்பபுரம்.

**என்னபரிசு?**

வினாவிடைப் பகுதியில் பரிசு பெறுபவர்களுக்கு என்ன பரிசுகள் வழங்கப்படுகின்றன?

—மு.ச. இராசரத்தினம், தேனி

(பரிசு நூல்களாக வழங்கப்பெறுகிறது—ஆசிரியர்)

**நின்று நிலைபெற்று**

"அருளோசை" நின்று, நிலைபெற்று நீடுழிவாழ இறைவனை வேண்டுகிறேன்.

—வீ.சிவகுமாரன், சான்றோர் குப்பம்

**சந்தேகம்**

சமயம் பற்றிய சந்தேகங்களை நீக்க ஒரு பகுதி ஆரம்பிக்க வேண்டும். பாராயணத்திற்குரிய பாடல்களையும் வெளியிடவேண்டும்.

—பி. மாணிக்கம், பாலூர் சத்திரம்.

**தவறுமல்**

தவத்திரு. அடிகளார் அவர்களின், திருவளர் செல்வனுக்கு, வள்ளுவர் வழியில் ஆகிய இருகட்டுரைகளையும் ஒவ்வொரு இதழிலும் தவறுமல் வெளியிட வேண்டுகிறேன்.

—ம. செல்வராஜ், 5 கிழக்கு மாடவீதி, சென்னை-4.

**வாழ்த்துகிறேன்**

அருளோசைக்கு 2-ம் ஆண்டு தொடங்க இருப்பது கண்டு பெருமகிழ்ச்சியடைகிறேன்- நல்வாழ்த்துக்கள்,

—ச. பாலசுப்பிரமணியன்-சங்கரன் கோவில்

**பேரவையின் தொண்டு**

இந்து சமயம் புத்துணர்வுபெற்றிட "அருளோசை" மூலம் தெய்விகப் பேரவை ஆற்றும் தொண்டு எதிர்கால நம்பிக்கை ஒளியாகத் திகழ்கிறது.

—புலவர், இளமணி—செ. செல்லய்யா, சமுத்திரம்

**மாற்றுமல்**

"அருளோசை"யைத் தற்போதுள்ள அளவில் சிறிதும் மாற்றுமல் இருக்கக் கேட்டுக் கொள்கிறேன்.

—பி. சுப்பிரமணிய நாடார்—பணிக்கன் குடியிருப்பு.

**வாழ்வில் ஒளி**

மக்களது உள்ளம் பண்பட்டு-வாழ்வில் ஒளிவீசும்படி செய்யும் தங்களது பணி அரிய பணியாகும்.

—கே. சண்முகம், எம். எ., கோவை-1.

**துடிப்புள்ள இளைஞர்களுக்கு**

துடிப்புள்ள இளைஞர் சமுதாயத்தை உற்சாகப்படுத்துங்கள்.

—தி. கு. நவனீதம், திருச்சி-2.

பிற்சேர்க்கை ஜூன் 1973.

பாடம் 12 வினாவிடை சந்தா எண்............

இந்த இதழிலுள்ள கட்டுரைகள் பற்றிய வினாக்களேயன்றி பொது சமய அறிவுத் தொடர்பான கேள்விகளும் உள்ளன. வினாத்தாள்களி லன்றி வேறு தாள்களில் விடைகள் எழுதக் கூடாது. சொந்தக் கையெழுத்தில் எழுதி 30-6-1973 க்குள் இவ்வலுவலகத்தில் கிடைக்கும் படி அனுப்பவேண்டும்.

மதிப்பெண் சமம்] [மதிப்பெண் 100

1. இருள் கடிந்தெழுந்த ஞாயிறு திருவள்ளுவர்—விளக்குக.

2. கந்தன், கார்த்திகேயன், குமாரன், சரவணபவன்—குறிப்புக்கள் வரைக.

3. திருவாசகத்தின் பெருமைக்குக் காரணங்கள் எவை?

4. சம்பந்தர் வரலாற்றில் திருக்கோலக்கா, திருமருகல், திருமறைக்காடு ஆகிய பதிகளில் நிகழ்ந்த அற்புதங்கள் என்னென்ன?

5. ‘ஏரிகாத்த இராமர்’ என்ற பெயர்வரக் காரணம் என்ன?

6. மணவாள மாமுனிகளுக்கும் எம்பெருமானுருக்கும் உள்ள ஒற்றுமை களைச் சுருக்கித் தருக.

7. அறிவாராய்ச்சியியலையும் அதனோடிணைந்த துறைகளையும் பற்றிக் கூறுக.

8. கோயில் அமைப்பில் கோபுரம், பிரகாரம், பலிபீடம், கொடிமரம், நந்தி, கர்ப்பக்கிரகம் இவற்றின் தத்துவங்கள் என்ன?

9. பாடல்பெற்றபதிகள், மங்களாசாசனம் செய்த திவ்விய தேசங்கள் இவைபற்றித் தெரிந்ததை எழுதுக.

10. தென்னுட்டை வாழ்விக்க வந்த சான்ருேர்கள்—ஆழ்வார்களும் நாயன்மார்களும்—காரணங் காட்டி விவரிக்கவும்.

கையெழுத்து

---

[பெரிய எழுத்தில் தெளிவாக எழுதுக]

பெயர் வயது

கதவு எண், தெரு

ஊர்—அஞ்சல் நிலையம்

மாவட்டம்

இப்பகுதியில் விடைகளை எழுதி உரிய அஞ்சல் தலைகளையொட்டிக கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்ப வேண்டும் :—

"அருளோசை"
தமிழ்நாடு தெய்விகப் பேரவை,
நெ. 9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆழ்வார்பேட்டை, சென்னை-600018

திருச்சிற்றம்பலம்

# திருப்புகழ்

(திருச்செந்தூர்)

வஞ்சத் துடனொரு நெஞ்சிற் பலநினை
வஞ்சிக் கொடியிடை மடவாரும்.

வந்திப் புதல்வரும் அந்திக் கிளைஞரு
மண்டிக் கதறிடு வகைகூர;

அஞ்சக் கலைபடு பஞ்சிப் புழுவுடல்
அங்கிக் கிரையென வுடன்மேவ

அண்டிப் பயமுற வென்றிச் சமன்வரும்
அன்றைக் கடியிணை தரவேணும்.

கஞ்சப் பிரமனை அஞ்சத் துயர்செய்து
கன்றச் சிறையிடு மயில்வீரா!

கண்டொத் தனமொழி அண்டத் திருமயில்
கண்டத் தழகிய திருமார்பா!

செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ்தெரி
செந்திற் பதிநகர் உறைவோனே!

செம்பொற் குலவட குன்றைக் கடலிடை
சிந்தப் பொரவல பெருமாளே!

—அருணகிரிநாதர்.

பொழிப்புரை: தாமரை மலரைத் தன் இருப்பிடமாகக் கொண்ட பிரமன் அஞ்சுமாறு இடர்கொடுத்து, அவன் மனம் வருந்தும்படியாக (தான் கொண்ட செருக்கு நீங்கும்படியாக அவனைச்) சிறையிலிட்ட மயில்வீர! கற்கண்டு போன்ற இனிய குரலைக் கொண்டவளும், மயிலினை யொத்த சாயலை உடையவளுமான தெய்வயானையின் திருக்கண்கள் கண்டு மகிழும் படியான ஒப்பற்ற திருமார்பை யுடையவனே! செழுமை பொருந்திய குறையில்லாத சொற்களையுடைய சங்கப்புலவர்களின் தமிழைப் பெற்ற திருச்செந்தூர் என்னும் திருநகரை உறைவிடமாகக் கொண்டவனே! (பார்வைக்குச்) செம்பொன்போன்று சிறந்து (ஊடே வஞ்சம் பொருந்தி) வடக்கே இருந்த (மாயையாகிய கிரவுஞ்சம் எனும்) மலையானது சிதறுண்டு கடலில் ஆழ்ந்து அமிழும் படியாக அமர் செய்ய வல்ல பெருமானே!

ஒப்பற்ற ஒன்றுகிய நெஞ்சில் பலவேறுபட்ட வஞ்சக எண்ணங்களைக் கொண்ட வஞ்சிக் கொடி போன்ற இடையினையுடைய, மாதர்களும், போற்றி வணங்கும் புதல்வர்களும் இறுதிக் காலத்து உறவினர்களும் "கூகாவெனக்" கூடியழும் ஒலி மிகவும், (இவ்வுடலிற்) பொருந்திய தத்துவக் கூறுகளெல்லாம் கலைந்து பிரிந்து பஞ்சு போன்ற மெல்லிய இவ்வுடல் நெருப்புக்கு இரையாகுமாறு, விரைந்து செல்லும்படியாக, வெற்றியை மிகுதியும் உடைய காலன் அச்சுறுத்தி அருகே வரும் அந்த நாளில் (ஒப்பற்ற உனது) திருவடியிணைகளைத் தந்து, அருள்புரிவாயாக!

—(வள்ளிமணாளன்).

---

ஆனிப் பௌர்ணமியில் ஸ்ரீ அருணகிரிநாதரின் நினைவுநாள் வருவதையொட்டி வெளியிடப் பெறுகிறது.